1st March 1958]

SRI A. GOVINDASAMY : நீண்ட காலக் கடன் கொடுப்பதற்கு நில அடமான பாங்குகள் இருப்பதாகச் சொன்னார்கள். அப்படி நீண்ட காலக் கடன் வாங்குவதற்கு நீண்ட காலம் பிடிக்கிறது. ஆகையால் இந்த நீண்ட காலக் கடனை விவசாய பாங்குகள் மூலம் கொடுப்பதற்கு அரசாங்கம் முயற்சிக்குமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : நீண்ட காலக் கடன் கொடுப்பதற்கு அதிகமாக பணம் வேண்டியிருக்கிறது. அதற்காக சர்க்கார் நீண்ட கால டிபென்சர்கள் வெளியிட்டு அதன் மூலம் அந்தக் கடன்களை கொடுக்கிறார்கள். நீண்ட காலக் கடன் கொடுப்பதற்காக விவசாய பாங்குகளை வைப்பது அவர்களுடைய நோக்கத்திற்கு மாறாகும். மத்திய காலக் கடன் கொடுப்பதற்காக விவசாய பாங்குகளை ஏற்படுத்தியிருக்கிறோம்.

SRI P. G. MANICKAM : மேட்டூர் கால்வாய் பிரதேசத்தில் ஏற்பட்ட நீர்க்கசிவினால் வலது கரையிலுள்ள 400 ஹரிஜன வீடுகள் சேதம் அடைந்திருக்கிறது. அவர்கள் அந்த வீடுகளை திருப்பிக்கட்டிக்கொள்ளுவதற்கு சர்க்கார் ஒரு வீட்டிற்கு ரூ. 100 தான் மான்யத் தொகையாகக் கொடுக்கப்போவதாகத் தெரிகிறது. ஆகையால் கூட்டுறவு சங்கங்களை ஏற்படுத்தி அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொள்ளப் போதுமான தொகை கொடுக்க கவர்ன்மெண்டார் முயற்சி எடுக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : This question does not arise out of the main question. But if the Hon. Minister is prepared to answer, I have no objection.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## III—PRESENTATION OF THE BUDGET FOR THE YEAR 1958-59.

MR. SPEAKER : Copies of the Budget Speech may now be distributed. இப்பொழுது கனம் நிதி மந்திரி அவர்கள் 1958–59 ம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை இந்த சபை முன்பு சமர்ப்பிப்பார்கள்.

SRI K. VINAYAKAM : On a point of information, Sir. For want of anything to do, may I ask . . . .

MR. SPEAKER : We have got enough to do. But if the Hon. Member wants to ask questions, he need not say, "For want of anything else to do." He can straightway ask the question

SRI K. VINAYAKAM : May I know the time at which we are meeting to-morrow?

MR. SPEAKER : The Business Advisory Committee will meet after the Hon. the Finance Minister's speech, and decide at what time we should meet on Monday.

SRI A. V. THOMAS : In any case we are not meeting to-morrow (Sunday)!

MR. SPEAKER : Notices will be sent to the houses of Members intimating them the time at which the Assembly will meet on Monday. They will learn it also from the news papers. எல்லா அங்கத்தினர்களுக்கும் பட்ஜெட் அறிக்கையின் நகல் கிடைத்திருக்குமென்று நினைக்கிறேன். கனம் நிதி மந்திரி அவர்களை அறிக்கையை சமர்ப்பிக்கும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

The Hon. the Finance Minister will now present the Budget. 11-50 a.m.

[1st March 1958

முன்னுரை. THE HON. SRI C. SUBRAMANIAM : சபைத் தலைவர் அவர்களே 1958-59-ம் ஆண்டின் நிதி நிலை அறிக்கையையும் நடப்பு ஆண்டுக்கான திருத்தப்பட்ட மதிப்பீடுகளையும் இச்சபையின் கண் சமர்ப்பிக்க முன்வந்துள்ளேன். இவ்விரண்டு மதிப்பீடு களையும் பொருத்தவரையில், நிதி நிலைமை சீர்ப்பட்டிருப்பது வரவேற்கத்தக்க அம்சமாகும். நடப்பு ஆண்டில் மிக அதிக மாகத் துண்டு விழும் என்று நாம் எதிர்பார்த்ததற்கு மாருகத் துண்டு விழாமல் போனதுமட்டுமல்லாமல் வரவிருக்கும் ஆண்டில் துண்டு விழும் தொகையும் குறைந்துள்ளது. இந் நிலைக்கு முக்கிய காரணம் நிதிக் கமிஷனின் சிபாரிசுகள்தான். பருவ நிலைமை திருப்திகரமாய் இருந்ததும் நமக்கு சாதகமாயிற்று.

பருவ நிலை. 2. தென்மேற்குப் பருவ மழை உரிய காலத்தில் ஆரம்ப மாயிற்று. ஆயினும் இது சாதாரணமாக பெய்யும் அளவிற்கு 20 சத விகிதம் குறைவாக, சராசரி 9·7 அங்குலம்தான் பெய்தது. செங்கற்பட்டு, தஞ்சை ஆகிய கடலோர மாவட் டங்களில் போதுமான மழை பெய்தது. இந்தப் பருவத்தில் மத்திய மாவட்டங்களான திருச்சி, சேலம், கோயம்புத்தூர் ஆகியவற்றில் போதுமான மழை பெய்யவில்லை. சாதாரண மாகப் பெய்யும் அளவிற்கு 30 முதல் 50 சத விகிதம் குறை வாகவே இங்கு மழை பெய்தது. இதனுல் வேர்க்கடலை, புன்செய் பயிர்கள் முதலியன சரியாக விளையவில்லை. மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய தெற்கு மாவட்டங் களிலும் மழை குறைவாக இருந்தது. ஆனுலும் விளைச்சலைப் பாதிக்கும் அளவுக்கு மோசமில்லை. மொத்தத்தில் வடகிழக்குப் பருவ மழையைப் பொருத்தவரை திருப்திகர மாகவே இருந்தது. சராசரி 16·6 அங்குலம் பெய்தது ; இது சாதாரணமாகப் பெய்வதற்கு 6 சத விகிதம்தான் குறைவு. செங்கற்பட்டு மாவட்டத்தில், குறிப்பாகத் தென் பகுதியில் இக்குறைபாடு மிகவும் அதிகமாக இருந்தது. ஆனுல் இந்த மாவட்டத்தில் உள்ள குளங்களில் தென்மேற்குப் பருவ மழை காரணமாக ஏற்கனவே தண்ணீர் கொஞ்சம் இருந்தது. இந்தப் பருவ மழையின்போது தென் ஆற்காடு, திருச்சி மாவட் டங்களிலும் நிலைமை திருப்திகரமாக இல்லை. சாதாரணமாகப் பெய்வதை விட 30 சத விகிதம் குறைவாகவே இங்கு பெய்தது. கோவை மாவட்டத்தில் மட்டும் பெரு மழை பெய்தது. சாதாரணமாகப் பெய்வதை விட ஏறக்குறைய 40 சத விகிதம் அதிகமாக இருந்தது. சேலம், வட ஆற்காடு ஆகிய மத்திய மாவட்டங்களிலும் தெற்கு மாவட்டங்களிலும் நிலைமை மோசமாக இல்லை. இங்கு சாதாரணமாகப் பெய்வதை விட 5 அல்லது 10 சத விகிதம்தான் மழை குறைவு.

1st March 1958] [Sri C. Subramaniam]

3. பூர்வாங்க விளைச்சல் மதிப்பீடுகளின்படி நெற்பயிர் முன்பைவிட சற்று அதிகமான அளவில் பயிரிடப் பட்டதென்றும் நல்ல விளைச்சல் கிடைக்கும் என்றும் தெரிகிறது. ஒரு சில இடங்களில் பூச்சித் தொல்லையால் பாதிக்கப்பட்டபோதிலும், காவிரி கழிமுகப் பகுதியிலும் வாய்க்கால் பாசனப் பகுதிகளிலும் மொத்தத்தில் நல்ல விளைச்சலெனத் தெரிகிறது. வட ஆற்காடு, தென் ஆற்காடு, சேலம் மாவட்டங்களில் தண்ணீர் வசதிக் குறைவு காரணமாக நெல் சிறிது குறைவாகப் பயிரிடப்பட்டது. திருநெல்வேலி மாவட்டத்தில் குளத்துப் பாசன நிலங்கள் சில நீரின்மையால் பாதிக்கப்பட்டன. இராமநாதபுரம், செங்கற்பட்டு ஜில்லாக்களில் விளைச்சல் எப்போதும் போல் இருந்தது. சேலம், கோயம்புத்தூர் முதலிய மத்திய மாவட்டங்களில் குறித்த காலத்தில் மழை பெய்யாததன் காரணமாக புன்செய் தானியங்கள் மிகவும் குறைந்த அளவில் பயிர் செய்யப்பட்டன; விளைச்சலும் சாதாரணமாக இருப்பதைவிட குறைந்து இருந்தது. கோயம்புத்தூர், சேலம் மாவட்டங்களில் பருத்தி, வேர்க்கடலை விளைச்சல் நிலைமை திருப்திகரமாக இருக்கவில்லை. நீலகிரியில் உருளைக்கிழங்குப் பயிரும் மழையாலும் உறை பனியாலும் பாதிக்கப்பட்டுள்ளது. ஆனால் ராஜ்யத்தின் நிலைமையை மொத்தமாக மதிப்பிடும் போது உற்பத்தி 1956-57-ம் ஆண்டில் இருந்த அளவு இல்லாத போதிலும், பொதுவாக திருப்திகரமென்றே கருதலாம். அதிர்ஷ்டவசமாகப் புயல், வெள்ளம், பஞ்சம் போன்ற கொடுந்தீங்கு எதுவும் இந்த ஆண்டில் ஏற்படவில்லை. விளைச்சல் நிலைமை.

4. 1957-ம் ஆண்டில் உணவுப் பொருள்களின் விலைவாசிகள் ஏறுமுகமாகவே இருந்தது, அதிகக் கவலைக்கு இடம் தந்தது. உணவுதானிய விலைகளின் மொத்தக் குறியீட்டு எண் 1956-ம் ஆண்டு ஜூலை மாதத்தில் 377-ஆக இருந்தது, அடுத்த 6 மாதங்களில் மிகவும் உயர்ந்து 1957 ஜனவரியில் 494-ஆக இருந்தது. நல்ல அறுவடை ஏற்பட்டதன் பலனாக 1957 மார்ச்சு மாதத்தில் இது 470-ஆக சற்றுக் குறைந்தது. ஆனால் அதற்குப் பிறகு மீண்டும் நெருக்கடி ஏற்பட்டது. நிலைமை முன்பிருந்ததுபோல் அவ்வளவு கடுமையாக இல்லாது போயினும் இந்த நெருக்கடியின் பயனாகக் குறியீட்டு எண் மேலும் உயர்ந்து 1957 டிசம்பரில் 512 அளவில் நின்றது. உணவுப் பொருள்களில் குறிப்பிடத்தக்க பற்றுக்குறையின் காரணமாக இந்தத் திடீர் உயர்வு ஏற்படவில்லை என்பது நிலைமையை ஆராயும்போது இப்பொழுது நமக்குத் விவசாயப் பொருள்களின் விலைவாசிகள்.

[Sri C. Subramaniam] [1st March 1958

தெளிவாகிறது. ஆனால் அந்த நேரத்தில் நிலைமை அபாயகரமானதாகவே தோன்றியது. இந்த நெருக்கடியைத் தடுக்கப் போதிய நடவடிக்கைகள் எடுக்க வேண்டியதாயிற்று. மாதம் சுமார் 4,000 டன் உணவு தானியங்களை விற்க 800 நியாய விலைக் கடைகள் திறக்கப்பட்டன. இதனால் விலைவாசியின் உயர்வு கட்டுப்படுத்தப்பட்டது. நெருக்கடியும் சற்று சமாளிக்கப்பட்டது. மீண்டும் ஒரு நல்ல அறுவடையின் பயனாக விலைவாசிகள் இப்பொழுது ஸ்திரமாகி வருகின்றன. இருந்தபோதிலும் நாம் இன்னும் நிலைமையை விழிப்புடன் கவனிக்கவேண்டிய அவசியம் இருந்து வருகிறது.

உணவு நிலைமை.

5. உணவு உற்பத்தியைப் பெருக்க நாம் எடுத்துக் கொண்டுள்ள முயற்சிகளை மேலும் பெருக்கித் தீவிரமாக்க வேண்டும் என்பதுதான் தற்போதைய உணவு நிலைமை நமக்கு உணர்த்தும் படிப்பினை. பல பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றியுள்ளோம். அடி ஊற்று நீரைப் பயன்படுத்தக் கிணறுகளையும் வடிமுனைக் கிணறுகளையும் தோண்டியுள்ளோம். பாசனத்திற்காகத் தண்ணீர் இறவை இயந்திரங்கள் அமைத்துள்ளோம். இரசாயன உரங்கள், பிண்ணாக்கு, தழை உரம் போன்ற உரங்களை அதிக அளவில் உபயோகித்து வருகின்றோம். நல்ல உயர் ரக வித்துக்களையும் பூச்சி மருந்துகளையும் கையாளும் முறை பெரிதும் பரவி வருகிறது. இவை மூலமாக, சென்ற சில வருஷங்களாக உணவு உற்பத்தியைப் பெருக்குவதில் ஓரளவு வெற்றி கண்டுள்ளோம். முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் கடைசி ஆண்டான 1955-56-ல் தற்போதைய சென்னை ராஜ்யத்தில் மொத்த உணவு உற்பத்தி 44 லட்சம் டன்னாக உயர்ந்து இருந்தது. 1950-51-ம் ஆண்டு நிலவரத்தை அடிப்படையாகக் கொண்டுதான், நாம் பயிர் நிலைமைப் புள்ளி விவரக் கணக்குகளைத் தயாரித்து வருகிறோம். அந்த ஆண்டில் விளைச்சல் 28 லட்சம் டன்தான். அப்பொழுது பருவநிலை மோசமாக இருந்தது என்பதைக் கணக்கில் எடுத்துக்கொண்டாலும் 16 லட்சம் டன் அதிகமாக 1955-56-ம் ஆண்டில் நாம் உற்பத்தி செய்ய முடிந்தது என்பது நமக்கு உற்சாகம் அளிக்கக்கூடியது. 1956-57-ம் ஆண்டில் முந்திய ஆண்டில் இருந்தது போலவேதான் பருவநிலை அமைந்திருந்தது. இருந்தபோதிலும் உணவு உற்பத்தி இன்னும் 2 லட்சம் டன் அதிகமாகி 46 லட்சம் டன் ஆக இருந்தது. உணவு உற்பத்தி பெருகி வருகிறதென்பதை இது நிச்சயப்படுத்துகிறது. நம் ராஜ்யத்தில் 3 கோடி மக்கள் வாழ்கின்றார்கள். ஒருவருக்கு ஒரு நாளைக்கு ஒரு பவுண்டு வீதம் கணக்கிட்டால் நமக்கு 48 லட்சம் டன் உணவு தேவைப்படுகிறது. 1956-57-ம் ஆண்டில் நாம் உற்பத்தி செய்தது 46 லட்சம் டன். இதிலிருந்து பற்றாக்குறை அதிகமில்லை என்பது புலனாகும். சென்ற ஆண்டில் நம் ராஜ்யத்திலிருந்து சுமார் 2½ லட்சம் டன் அரிசி கேரள ராஜ்யத்திற்குச் சென்றது.

1st March 1958] [Sri C. Subramaniam]

இதற்குப் பதிலாக ஆந்திராவிலிருந்தும் வெளி நாடுகளிலிருந்தும் நமக்குக் கிடைத்தது சுமார் ஒரு லட்சம் டன்தான். இருந்தபோதிலும் சென்ற ஆண்டு உணவுதானிய நிலைமையில் நெருக்கடி ஏற்படாதது, உணவு பற்றுக்குறை அதிகம் இல்லை என்பதை உறுதிப்படுத்துகிறது. இந்த ராஜ்யத்தில் ஒரு ஏக்கரின் சராசரி நெல் விளைச்சல் உயர்ந்துகொண்டே வந்துள்ளது. 1954-55-ம் ஆண்டில் 1,149 பவுண்டு கலவனற்ற அரிசி கிடைத்தது. 1955-56-ம் ஆண்டில் 1,214 பவுண்டாகவும், 1956-57-ம் ஆண்டில் 1,255 பவுண்டாகவும் உயர்ந்தது. இந்தியாவில் மற்ற எல்லா ராஜ்யங்களிலும் ஏற்படும் சராசரி விளைச்சலைவிட நம் ராஜ்யத்தில்தான் அதிகமான விளைச்சல். அகில இந்தியாவிலும் ஒரு ஏக்கருக்குச் சராசரி 750 பவுண்டுதான் விளைகின்றது. இச்சாதனைகள் எல்லாம் நமக்குத் திருப்தி அளிக்கின்றன. இருந்தபோதிலும் விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதற்காகவும் பருவநிலை மோசமாகின்ற காலங்களிலும் நிலைமையைச் சமாளிப்பதற்காகவும் போதுமான அளவு நாம் இன்னும் உற்பத்தி செய்யவில்லை என்பதை உணர வேண்டும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 12·79 லட்சம் டன் அதிகப்படியாக உணவு உற்பத்தி செய்ய வேண்டும் என்ற இலக்கை நாம் ஏற்றுக்கொண்டுள்ளோம். இதில் 1956-57-ம் ஆண்டில் 2 லட்சம் டன் உற்பத்தியைப் பெருக்கிவிட்டோம். நடப்பு ஆண்டில் அதற்குமேல் 3 லட்சம் டன் அளவு உற்பத்தி பெருகுமென்று எதிர் பார்க்கிறோம். இன்னும் மேலும் உற்பத்தியைப் பெருக்குவது அவ்வளவு எளிதல்ல. ஏனென்றால் இரசாயன உரங்களில் பற்றுக்குறை ஏற்பட்டுள்ளது. மேலும் விவசாயத்தில் போகப்போக முயற்சி அளவிற்கு ஏற்ற பலன் கிட்டாத நிலை ஏற்படலாம். இருந்தபோதிலும் உணவு நிலைமையில் மொத்தத்தில் உள்ள பற்றுக்குறையை முன்னிட்டு நாம் இன்னும் விசேஷ முயற்சி எடுத்துக்கொள்வது அவசியம். சீன நாட்டிலுள்ள நிலைமை அநேகமாய் நம் நாட்டு நிலைமையைப்போன்றதுதான். அங்கு ஒரு ஏக்கருக்கு சராசரி 1,550 பவுண்டு அரிசி கிடைக்கின்றது. ஜப்பானில் ஒரு ஏக்கருக்கு 2,550 பவுண்டு அரிசி விளைகின்றது. ஆகவே மற்ற நாடுகளில் கையாளப்படும் உற்பத்திப் பெருக்க முறைகளை நாமும் கையாண்டால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிர்ணயித்துள்ளதில் மிச்சமுள்ள 8 லட்சம் டன் உணவு உற்பத்தி உயர்வை அடைவது அசாத்தியமல்ல.

6. நமது விவசாய அபிவிருத்தித் திட்டத்தில் முக்கியமான அம்சம் உயர் ரக வித்துக்களைப் பெருக்குவதும் வழங்குவது மாகும். நம் ராஜ்யத்தில் 360-க்கு மேற்பட்ட விதைப் பண்ணைகள் அமைக்கத் திட்டமிட்டுள்ளோம். 25 ஏக்கரா நிலத்தில் அமைக்கப்படும் இந்த வித்துப் பண்ணைகள் தேசிய விவசாய வளர்ச்சி.

[Sri C. Subramaniam] [1st March 1958

வளர்ச்சித் திட்ட வட்டாரத்துக்கு ஒன்று வீதம் அமைக்கப் படும். இப்பண்ணைகளில் 2,650 டன் விதை நெல்லும் 500 டன் புன்செய் தானிய வித்துக்களும் உற்பத்தி செய்ய முடியும். இவை கிராம விதைப் பண்ணைகளில் மேலும் பெருக்கப்படுவதன் மூலம் நம் ராஜ்யத்திற்குத் தேவையான வித்துக்களில் 85 சத விகிதம் கிடைக்க ஏற்பாடு செய்ய முடியும். 1956-57-ம் ஆண்டில் இத்தகைய பண்ணைகள் 38 ஆரம்பிக்கப்பட்டன. நடப்பு ஆண்டில் ஆரம்பிக்க உத்தேசித்துள்ள 136 விதைப் பண்ணைகளில் 1957-ம் ஆண்டு டிசம்பர் முடிய 116 பண்ணைகளை ஏற்கனவே ஆரம்பித்து விட்டோம். எஞ்சிய இருபது இந்த ஆண்டின் இறுதிக்குள் ஆரம்பிக்கப்படும். 1958-59-ம் ஆண்டில் 72 லட்ச ரூபாய் செலவில் 180 பண்ணைகளை ஆரம்பிக்க வரவு செலவுத் திட்டத்தில் வசதி செய்யப்பட்டுள்ளது. இத்துடன் இத்திட்டம் ஏறக்குறையப் பூர்த்தியாகிவிடும். இந்த ஆண்டில் ஒரு லட்சத்து நாலாயிரம் டன் அமோனியம் சல்பேட் உரத்தை வழங்கத் திட்டமிட்டிருந்தோம். ஆனால் இவ்வுரம் போதிய அளவு கிடைக்காத காரணத்தால் 75,000 டன்தான் வழங்க முடிந்தது. வரவு செலவுத் திட்ட ஆண்டில் 1½ லட்சம் டன் உரம் வழங்கத் திட்டமிட்டிருந்ததை இப்பொழுது குறைக்க வேண்டியிருக்கும். இரசாயன உரங்கள் வாங்குவதற்கு விவசாயிகளுக்குக் கடன்கள் தந்து உதவ 60 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. நகரப் பகுதிகளில் கழிவு உர உற்பத்தித் திட்டம் தீவிரமாக்கப்பட்டு வருகிறது. மூன்று லட்சம் டன் கழிவு உரத்தை உற்பத்தி செய்து வழங்கு வதற்கு முனிசிபாலிட்டிகளுக்கும் பஞ்சாயத்துகளுக்கும் கடனாக 4 லட்சம் ரூபாய் தரவும், மான்யமாக 3 லட்ச ரூபாய் தரவும், வசதி செய்யப்பட்டுள்ளது. தழை உர வித்துக்களை வழங்கும் திட்டம் தொடர்ந்து நடந்துவரும். 1,200 டன் வித்துக்கள் வழங்கத் திட்டமிட்டுள்ளோம். விவசாயிகளுக்குப் பாதி விலையில் பூச்சி மருந்துகளை வழங்குவதற்காக 8 லட்ச ரூபாய் செலவு செய்யவும், விவசாயிகளுக்கு பாதி விலைக்கு பூச்சி மருந்தைத் தெளிக்கும் கருவிகளை வழங்குவதற்காக 4 லட்ச ரூபாய் செலவு செய்யவும் வசதி செய்யப்பட்டுள்ளது.

நீர்ப் பாசனம்.

7. அமராவதி, சாத்தனூர், கிருஷ்ணகிரி, மணிமுத்தாறு போன்ற நமது பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் அனைத்தும் அநேகமாக நிறைவேறிவிட்டன. இந்த அணைகளிலிருந்து நடப்பு ஆண்டில் பாசனத்திற்கு நீர் விடப்பட்டுள்ளது. இந்த ஆண்டில் வைகை அணைக்கட்டுத் திட்டம் முடிவடையும். 1960-ம் ஆண்டில் கட்டளை, புல்லம்பாடி திட்டம் முடி வடையும். வீடூர், நெய்யாறு திட்டங்களிலும் வேலை தொடங்கி உள்ளது. நீர்ப்பாசனத் திட்டங்களுக்காக நடப்பு ஆண்டில் 2 கோடி 86 லட்ச ரூபாய் செலவு செய்யவும் 1958-59-ம் ஆண்டில் 1 கோடி 69 லட்ச ரூபாய் செலவு செய்யவும் ஏற்பாடாகி உள்ளது. இப்புதிய திட்டங்களின்

கீழ் ஆயக்கட்டு அபிவிருத்தியும் திருப்திகரமாக உள்ளது. ஏராளமான செலவில் பெரிய அணையைக் கட்டி அதில் தேங்கியுள்ள நீரைப் பயன்படுத்துவதற்கு அதிக தாமதம் ஏற்படுவதால் நமது சக்தி விரயம் ஆகிறதென்று திட்ட நிபுணர்கள் அடிக்கடி குறை கூறி வருகிறார்கள். நம்முடைய திட்டங்களைப் பொறுத்தவரையில் இக்குறைக்கு இடமே எழாது. நம்முடைய பிரச்னை நமக்குள்ள வசதிகளைப் பயன் படுத்திக்கொள்ளத் தவறியதல்ல. மேலும் திட்டங்களை வகுப் பதற்குப் போதிய இயற்கை வசதிகள் இல்லை என்பதுதான் நமக்குள்ள குறை. மேற்கு நோக்கிப் பாயும் ஆறுகள் சிலவற்றை நம் ராஜ்யத்திற்குத் திருப்பிப் பயன்படுத்தும் திட்டங்கள் பற்றிக் கேரள அரசாங்கத்துடன் பேச்சு வார்த்தைகள் நடந்து வருகின்றன. இரு ராஜ்யங்களுக்கும் நன்மை பயக்கும் முறையில் ஒரு முடிவு விரைவில் ஏற்படும் என்று நாம் எதிர் பார்க்கலாம். இதற்கிடையில் நமது சிறிய பாசனத் திட்டங் களைப் பழுது பார்த்துச் செம்மைப் படுத்த நாம் முயற்சிக்க வேண்டும். குளங்களைத் தூரெடுக்க 10 லட்ச ரூபாய் ஒதுக்கப் பட்டுள்ளது. இதைச் சேர்த்து சிறு பாசனத் திட்டங்களுக் காக 70 லட்ச ரூபாய் செலவிடப்படும். ஒன்பது லட்ச ரூபாய் செலவில் அடி ஊற்று நீரைப் பயன்படுத்த வடிமுனைக் கிணறுகள் தோண்டும் திட்டத்தின்கீழ் வேலைகள் தொடர்ந்து நடக்கும்.

8. நமது கால்நடைச் செல்வத்தைப் பேணப் பல திட் டங்கள் நன்கு முன்னேறி வருகின்றன. இந்த ஆண்டில் இன்னும் நான்கு கேந்திர கிராம நிலையங்கள் திறக்கப்படும். கேந்திர கிராமங்களில் வளர்க்கப்படும் உயர் ரகப் பொலி காளைகளைப் பயன்படுத்திக்கொள்ள நான்கு விஸ்தரிப்பு நிலையங்கள் திறக்கப்படும். இராமநாதபுரத்தில் ஒரு கால்நடைப் பண்ணை யையும், செங்கற்பட்டு, சின்ன சேலம் ஆகிய இடங்களில் ஆட்டுப் பண்ணைகளையும் ஆரம்பிக்க நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. மாதவரம் கால்நடைப் பண்ணைத் திட்டத்தின் கீழ் வேலைகள் துரிதமாக மேற்கொள்ளப்படும். இதற்கு 25 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. கோழி வளர்ப்பு அபிவிருத்திக்கு 2·16 லட்ச ரூபாய் செலவில் புதிய திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. கால்நடைப் பராமரிப்பு

9. அடுத்த ஆண்டில் மீன்வள அபிவிருத்திக்காக 15 பாப்லோ முறை இயந்திரப் படகுகளை நிர்மாணித்து அவற்றைக் குறைந்த விலைக்கு மீனவர்க்கு விற்பதற்கும், கடலூரிலும், நாகப்பட்டினத்திலும் மீன்பிடிப்பதற்குத் துறைமுகங்கள் கட்டுவதற்கும், சாத்தனூர், மணிமுத்தாறு நீர்த்தேக்கங்களில் மீன் வளர்ப்பதற்கும், கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள கடலோரக் கிராமங்களில் மீன்பிடிப்பவர் படகுகளுக்கு இரவில் வழிகாட்டுவதற்குக் கலங்கரை விளக்குகள் அமைப் பதற்கும் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. இத்திட்டங் களுக்காக மொத்தம் 21 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. மீன்வளம்.

[Sri C. Subramaniam] [1st March 1958

காடுகள். 10. ரூபாய் 29 லட்சம் செலவில் புதிய காடுகளைத் திட்ட மிட்டபடி வளர்க்கும் வேலை தொடர்ந்து நடக்கும். அதன்படி கடலோர மாவட்டங்களில் முந்திரி, சவுக்கு முதலியன பயிர் செய்வதற்கும் நீலகிரியில், ப்ளூகம், வாட்டில், தீக்குச்சி மரம் உற்பத்திக்கும், ஆறு, வாய்க்கால் ஓரங்களில் தேக்கு, இதர விலை உயர்ந்த மரங்கள் உற்பத்தி செய்வதற்கும் மண் அரிப்பால் பாதிக்கப்பட்டுள்ள பஞ்சாயத்துக் காடுகளைத் திருத்துவதற்கும் காடுகளிடையே போக்குவரத்து வசதிகளை அபிவிருத்தி செய்வதற்கும் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. மலைப் பகுதிகளிலும் சமவெளிப் பகுதிகளிலும் உள்ள சாகுபடி நிலத்தில் மண் வளப் பாதுகாப்புக்கு 17 லட்ச ரூபாய் ஒதுக்கப் பட்டுள்ளது.

கூட்டுறவு. 11. கிராமவாசிகளுக்கு நிதி வசதிகள் வழங்குவதைப் பொருத்தவரையில் விவசாயிகளுக்குத் தக்காவிக் கடனுகவும், மற்ற கடன்களாகவும் அரசாங்கம் தந்துதவ 3 கோடி 5 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் 300 பெரிய கூட்டுறவுக் கடன் சங்கங்கள் திறக்கக் கூட்டுறவு இலாகா உத்தேசித்துள்ளது. இதில் 240 சங்கங்கள் நடப்பு ஆண்டின் முடிவிற்குள் வேலை துவங்கும். எஞ்சிய 60 சங்கங்கள் அடுத்த ஆண்டில் ஆரம்பிக்கப் படும். 200 சிறிய கூட்டுறவுக் கடன் சங்கங்களும் அடுத்த ஆண்டில் ஆரம்பிக்கப்படும். ஈரோடு, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆகிய இரு பிர்காக்களைத் தேர்ந்தெடுத்து அவற்றில் விவ சாயிகளுக்குத் தேவையான கடன் வசதிகள் அனைத்தையும் கூட்டுறவு சங்கங்கள் மூலம் வழங்கப் பரீட்சார்த்தத் திட்டம் ஒன்று நடந்து வருவது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிந் ததே. இதுவரை கிடைத்த அனுபவத்தின் பயனை இத் திட்டத்தை வரும் ஆண்டில் மேலும் 6 தேசீய வளர்ச்சி வட்டாரங்களில் விரிவாக்க உத்தேசித்துள்ளோம். இன்னும் 5 நில அடமான பாங்குகளைத் திறக்கவும் திட்டம் இருக் கின்றது. இத்துடன் சேர்ந்து நில அடமான பாங்குகளின் எண்ணிக்கை 81 ஆகும். வரவு செலவுத் திட்ட ஆண்டின் இறுதிக்குள் கூட்டுறவு இயக்கம் 77 சதவிகிதம் கிராமங்களையும், கிராம மக்களில் 40 சதவிகிதத்தினரையும் தழுவி விவசாயி களுக்கு 13½ கோடி ரூபாய் நிதி வழங்கும் என்று எதிர் பார்க்கப்படுகிறது. 20 லட்ச ரூபாயைப் பூர்வாங்க பங்கு மூலதனமாகக் கொண்டு ஒரு தானிய சேமிப்புக் கிடங்கு கார்ப்பரேஷன் ஏற்படுத்தப்பட்டுள்ளது. இந்த ஆண்டில் சேலம், திருநெல்வேலி, உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி ஆகிய இடங்களில் 4 கிடங்குகள் திறக்கக் கார்ப்பரேஷன் திட்டமிட்டுள்ளது. அடுத்த ஆண்டில் மேலும் 6 கிடங்குகள் திறக்கப்படும்.

1st March 1958] [Sri C. Subramaniam]

12. பாசனம், மண்வளப் பாதுகாப்பு, நல்ல வித்துக்கள் பெருக்கம், உரம் வழங்குதல், விற்பனை ஸ்தாபனங்கள் அமைப்பு போன்ற பற்பல விவசாய அபிவிருத்தித் திட்டங்களுக்காக நாம் கணிசமான தொகை ஒதுக்கியுள்ளோம். ஆனல், தன்னுடைய நன்மைக்காக எவ்வளவு வசதிகள் வழங்கப்பட்டிருக்கின்றன என்பதை விவசாயி உணரும்படி செய்யாவிட்டால் இவ்வளவு செலவு செய்வதன் முழுப் பலனும் ஏற்படாது. ராஜ்ய வித்துப்பண்ணைகளில் உயர்ந்த ரக வித்துக்கள் ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்டபோதிலும் விவசாயி தன்னிடம் இருக்கும் மட்ட ரக விதைகளையே உபயோகித்துக்கொண்டுவரலாம். இரசாயன உரங்களையும், பூச்சி மருந்துகளையும் எங்கிருந்து பெறுவது என்பது அவனுக்குத் தெரியாமலே இருந்துவிடலாம். விவசாயக் கடன்கள் பெற உரிய அதிகாரியைச் சரியான காலத்திற்குள் அணுகிக் கடன் பெறுவதிலும் அவனுக்குக் கஷ்டங்கள் சில இருக்கலாம். நவீன விவசாய ஆராய்ச்சியின் பலன்களை ஒவ்வொரு விவசாயியும் உணரும்படி செய்வதற்கான அளவில் விவசாய இலாகா அமைந்திருக்கவில்லை. இந்தக் குறைபாடுகளைப் போக்கி விவசாயிக்கும் அரசாங்கத்தின் விவசாயத் துறைகளுக்கும் நெருங்கிய தொடர்பும் உறவும் ஏற்படுத்தும் நோக்கத்துடன்தான் தேசீய வளர்ச்சித் திட்டங்களும், சமுதாய அபிவிருத்தித் திட்டங்களும் தொடங்கப்பட்டுள்ளன. தேசீய வளர்ச்சித் திட்ட அமைப்பு ஏற்கெனவே நம் ராஜ்யத்தின் மூன்றில் ஒரு பகுதியில் அமல் நடந்து வருகிறது. அடுத்த ஆண்டில் மேலும் 51 தேசீய வளர்ச்சித் திட்ட வட்டாரங்களும், 16 சமுதாய அபிவிருத்தி வட்டாரங்களும் ஏற்படுத்தத் திட்டமிட்டுள்ளோம். கிராமப் போக்குவரத்து சாலைகள், மருத்துவ சாலைகள், பள்ளிக்கூடங்கள் போன்ற பொது வசதிகளைத் தங்களுக்குத் தாங்களே உருவாக்கிக்கொள்வதில் கிராம மக்கள் காட்டியுள்ள உற்சாகம் மிகவும் வரவேற்கத் தக்கதே. ஆனல், அபிவிருத்தி அடைந்த விவசாய முறைகளைக் கையாளும் அவசியத்தைக் குடியானவன் உணரச் செய்வதும் அதற்குத் தேவையான வசதிகளைப் பெறுவதில் அவனுக்கு உதவுவதுமே இந்த சமுதாய அபிவிருத்தி அமைப்பின் முக்கிய குறிக்கோளாய் இருக்கவேண்டும். சமுதாய அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் ஊழியர்கள் எண்ணிக்கை அதிகரித்து அதற்கு அதிகச் செலவும் செய்வதற்கு ஏற்ப கிராமத்தில் உற்பத்தியைப் பெருக்கவேண்டும். முடிவில் இந்த அபிவிருத்தித் திட்டங்களின் வெற்றி, விவசாயத் துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தைக் கொண்டே மதிப்பிடப்படும். இதற்குத் தேவையான முறையில் அதிகாரிகள் மனப்பான்மையிலும் உரிய மாறுதல் செய்ய அரசாங்கம் தன்னல் இயன்றதைச் செய்து வருகிறது. இந்த முக்கியமான குறிக்கோளை நிறைவேற்றுவதன் அவசியத்தை மக்களுக்கு உணர்த்தி அவர்

தேசீய நலப் பரப்புத் திட்டம்.

களுக்கு உற்சாகத்தை ஊட்டுவதில் இச்சபையில் உள்ள கனம் அங்கத்தினர்களும், இத்துறையில் பங்கு கொண்டுள்ள எல்லா பொது ஊழியர்களும் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பார்கள் என்று நம்புகிறேன்.

மின்சாரம்.

13. நமது மின்சாரத் திட்டம் சிறந்த முறையில் முன்னேறி வருகிறது. சென்னை மின்சார நிலைய விஸ்தரிப்புத் திட்டம் விரைவில் முடிவடையும். 30,000 கிலோவாட் சக்திகொண்ட ஒரு புது மின்னுக்கும் பொறி அடுத்த ஏப்ரல் மாதத்திலிருந்து வேலைசெய்யத் தொடங்கும். அடுத்த செப்டம்பர் மாதத்திற்குள் பெரியாறு நீர்மின்சாரத் திட்டத்தின் முதல் மின்னுக்கும் பொறி மூலம் 35,000 கிலோவாட் சக்தி நமக்குக் கிடைக்கும். குந்தா திட்டம் அடைந்துள்ள வெகு வேகமான முன்னேற்றத்தைக் கண்டு இத்திட்டத்தில் நமக்கு உதவி செய்து வரும் கானடா நாட்டு நிபுணர்கள் நம் நாட்டுப் பொறியியல் நிபுணர்களைப் பெரிதும் பாராட்டியுள்ளனர். கிராமங்களுக்கு மின்சாரம் பரப்பும் திட்டம் மிகுந்த வேகத்துடன் முன்னேறி வருகிறது. இந்த நிதி ஆண்டில் 1,000 கிராமங்களுக்கு மின்சாரம் பரப்ப உத்தேசித்திருந்தோம். அதில் 910 கிராமங்களுக்கு டிசம்பர் மாத முடிவிற்குள்ளாகவே மின்சார வசதி அளித்துவிட்டோம். இந்த ஆண்டு முடிவிற்குள் நம் இலக்குக்கு மேலாகவே சாதித்து விடுவோம். இப்பொழுது 6,200 கிராமங்களும், குக்கிராமங்களும் மின்சார வசதி பெற்றுள்ளன. சுமார் 60,000 தண்ணீர் இறவை இயந்திரங்கள் மின்சாரத்தால் இயங்குகின்றன. ஒவ்வொரு இறவை இயந்திரமும் மூன்று அல்லது ஐந்து ஏக்கராக்களுக்குப் பாசனம் அளிக்கும் என்ற கணக்குப்படி சுமார் 2 லட்சம் ஏக்கராக்களுக்குப் பாசன வசதியைப் பெருக்கக் கிராம மின்சாரத் திட்டம் உதவியுள்ளது. நடப்பு ஆண்டில் மின்சாரத்திற்காக வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ள $11\frac{1}{2}$ கோடி ரூபாய் 13 கோடி ரூபாயாக உயர்த்தப்பட்டுள்ளது. அடுத்த ஆண்டுக்கு சுமார் 12 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

பெருந் தொழில்கள்.

14. நம் ராஜ்யத்தின் தொழில் அபிவிருத்திக்கான ஒன்றுபட்ட திட்டம் வகுப்பதற்காகத் தொழில் பிரமுகர்கள் அடங்கிய ஆலோசனைக் குழு ஒன்றை அரசாங்கம் அமைத்துள்ளது. பல்வேறு மூலப் பொருள்களையும் மற்ற வசதிகளையும் ஆராய்ந்து உடனடியாக மேற்கொள்ளக்கூடிய உருவான திட்டங்களைத் தயாரிப்பதில் இந்த ஆலோசனைக் குழு இப்பொழுது ஈடுபட்டுள்ளது. நெய்வேலியில் நிலத்தைத் தோண்டி நிலக்கரியை வெட்டும் வேலைகள் ஆரம்பமாகி விட்டன. இரண்டு லட்சம் கிலோவாட் மின்சார சக்தியை உற்பத்தி செய்வதற்கும், ஆண்டுக்கு 70,000 டன் நைட்ரஜன் சத்துடைய இரசாயன உரங்கள் உற்பத்தி செய்வதற்கும், $3\frac{1}{2}$ லட்சம் டன் நிலக்கரியை உயர்ந்த எரிபொருளாக்குவதற்கும்

1st March 1958] [Sri C. Subramaniam]

இணைப்பான திட்டங்கள் 60 கோடி ரூபாய் செலவில் தயாரிக்கப்பட்டு வேகமாக முன்னேறி வருகின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் அடிப்படையான முக்கிய திட்டங்களில் ஒன்ருக நெய்வேலித் திட்டமும் ஏற்கப்பட்டுள்ளது. 1960-ம் ஆண்டுக்குள் இது முடிவடைந்துவிடும் என்று எதிர்பார்க்கலாம். திருநெல்வேலியில் சோடா உப்பு உற்பத்தித் தொழிற்சாலையும், அம்பத்தூரில் ரப்பர் டயர் தொழிற்சாலையும் அமைக்கும் வேலை திட்டமிட்டபடி முன்னேறி வருகிறது. டி.ஐ. சைக்கிள் கம்பனியை விரிவாக்கி ஆண்டுக்கு மூன்று லட்சம் சைக்கிள்கள் உற்பத்திக்கு வசதி செய்யும் திட்டம் உருவாகியுள்ளது. இராமநாதபுரத்தில் ஒரு புது சிமிட்டித் தொழிற்சாலை அமைக்கும் திட்டம் முன்னேறி வருகிறது. மின்சார மோட்டார்கள், மின் பொருத்தி சாதனங்கள் (Switchgears), மின் அழுத்த மாற்றிகள் (Transformers), குழாய்கள் முதலியவற்றை உற்பத்தி செய்வதற்குப் பல தொழிற்சாலைகள் நிறுவ அனுமதி வழங்கப்பட்டுள்ளது. கூட்டுறவு முறையில் அமைக்கப்பட்டு வரும் 3 சர்க்கரை ஆலைகள் 1959-ம் ஆண்டின் மத்தியிலிருந்து உற்பத்தியை ஆரம்பிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. திருச்சிராப்பள்ளியில் பெட்டவாய்த்தலையில் தனியார் துறையில் அமைக்கப்பட்டுள்ள சர்க்கரை ஆலையில் இன்னும் சில மாதங்களில் உற்பத்தி தொடங்கும். சேலம் இரும்புக் கனிகளின் பரிசீலனை ஜாம்ஷெட்பூரில் நடந்து வருகிறது. தனியார் துறையில் அனுமதிக்கப்பட்டுள்ள தேனிரும்புத் தொழிற்சாலை அமைப்பு முன்னேறி வருகிறது. சேலத்திலுள்ள அலுமினியக் கனிப் பொருள்களின் பரிசீலனைக்காக அமர்த்தப்பட்ட பிரஞ்சு நாட்டு நிபுணர் அக்கனிப் பொருள்களின் தரத்தைப்பற்றித் தம் கருத்தைத் தெரிவித்துள்ளார். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் உத்தேசிக்கப்பட்டுள்ள அலுமினியத் தொழிற்சாலை விரைவில் உருவாகும் என்று நாம் நம்பலாம். ரேயான் பட்டு நூல் உற்பத்திக்கான தொழிற்சாலை அமைக்க முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. இத்திட்டத்தை வகுத்துள்ளவர்கள் இத்தாலி நாட்டிலிருந்து கணிசமான நிதி உதவி பெற்றுள்ளார்கள். இத்திட்டங்களுக்குத் தேவையான அன்னிய செலாவணியைப் பெறுவதில் உள்ள கஷ்டங்களைச் சமாளிக்க அயல் நாட்டு முதலாளிகளுடன் பேச்சுவார்த்தைகள் நடந்து வருகின்றன. இம்முயற்சிகளில் ஈடுபட்டவர்கள் கஷ்டத்தைத் தீர்ப்பதில் அரசாங்கமும் இயன்ற வரை உதவி வருகிறது.

15. ராஜ்ய ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ள சிறு கைத்தொழில்களை வளர்ப்பதில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. எழுபது லட்சம் ரூபாய் செலவில் அமைக்கப்பட்டுள்ள கிண்டி தொழிற்பண்ணை நமது பிரதமரால் அண்மையில் ஆரம்பிக்கப்பட்டது. அதில் அமைக்கப் சிறு ரகத் தொழில்கள்

படும் 90 தொழிற்சாலை அமைப்புகளில் 52 அமைப்புகள் வெவ்வேறு தொழில் நடத்துவோருக்கு ஏற்கனவே ஒதுக்கப் பட்டுவிட்டன. சிறிய அளவில் அமைக்கப்படவிருக்கும் விருதுநகர், ஈரோடு, திருநெல்வேலி, மதுரை, மார்த்தாண்டம் தொழிற்பண்ணைகள் உருவாகி வருகின்றன. வரும் ஆண்டில் அவை திறக்கப்படும். நடப்பு ஆண்டில் சிறு கைத் தொழில்களுக்கு அரசாங்க உதவியாக சுமார் 25 லட்சம் ரூபாய் கடனுகை வழங்கப்பட்டுள்ளது. அடுத்த ஆண்டுக்கும் அதே அளவுத் தொகை ஒதுக்கப்படும். சிறு கருவிகள், அறுவை மருத்துவக் கருவிகள், மின்சார சாதனங்கள், விஞ்ஞான ஆராய்ச்சிக் கருவிகள், விளையாட்டுக் கருவிகள், மாதிரி வார்ப்பாலை ஆகியவற்றின் உற்பத்திக்காகத் தொழில் உதவி நிலையங்கள் பல்வேறு இடங்களில் அமைக்கப்பட்டு வருகின்றன. தொழில் நுட்ப செய்தி நிலையம் ஒன்று ஒரு நூல் நிலையத்துடன் விரைவில் சென்னையில் அமைக்கப்படும். ராஜ்ய சீரமைப்புக்குப் பின் மைசூர் ராஜ்யத்திற்கு மாற்றப்பட்ட கொள்ளேகால் பட்டுத் தொழிற்சாலைக்குப் பதிலாக 25 அமைப் புகள் கொண்ட பட்டு நூல் கண்டுத் தொழிற்சாலை ஒன்று ஓசூரில் ஏற்படுத்தப்படுகிறது. காதி, கிராமத் தொழில்கள் கமிஷனின் நிதி உதவி பெற்றுவரும் பல்வேறு கிராமத் தொழில்களும் கைப்பணித் தொழில்களும் தொடர்ந்து நடந்து வரும். இக்கைப்பணிப் பொருள்களை விளம்பரப் படுத்தவும், விற்கவும் முக்கிய இடங்களில் 4 விற்பனை நிலையங்கள் திறக்கவும் திட்டமுள்ளது.

கைத்தறி.

16. கைத்தறித் தொழிலின் தேவைகளை அரசாங்கம் மிகுந்த அக்கறையுடன் கவனித்து வருகிறது. கூட்டுறவு சங்கங்களில் உறுப்பினராய்ச் சேருவதற்கு நெசவாளர்களுக்குக் கடன் உதவி அளிக்கப்படுகிறது. அதுமட்டுமல்லாமல், அபிவிருத்தியடைந்த தொழில் சாதனங்களை வாங்குவதற்கும், விற்பனை வசதிகள் செய்து தருவதற்கும், துணி வாங்கு வோர்க்கு விலையில் சலுகை தருவதற்கும், நெசவாளர்களுக்கு வீடுகள் கட்டித் தரவும் செஸ் நிதியிலிருந்து உதவி வழங்கப் படுகிறது. துணித் தொழிலில் இப்பொழுது ராஜ்யத்திலுள்ள மந்தத்தின் காரணமாகக் கைத்தறித் துணி விற்பனையும் குறைந்துள்ளது ; ஏராளமான துணி தேங்கிக் கிடக்கிறது; தேங்கிக் கிடக்கும் துணியை விரைவில் விற்பனை செய்வதற்கு மத்திய அரசாங்கம் தந்து வரும் மான்யத்தைக் குறைக் காமல் தொடர்ந்து தரவேண்டுமென்று இந்திய அரசாங்கத் திடம் வற்புறுத்தப்பட்டுள்ளது. நெசவாளருக்கு நியாயமான விலையில் நூல் கிடைக்கும்படி செய்யத் திருநெல்வேலியில் அமைக்கப்படும் கூட்டுறவு நூற்பு ஆலை விரைவில் உற்பத்தியைத் தொடங்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. பன்னிரண்டாயிரம் கதிர்கள் கொண்ட இன்னொரு ஆலை

ஒன்றை ஸ்ரீவில்லிபுத்தூரில் தொடங்க உத்தேசமுள்ளது. கைத்தறித் தொழிலின் முன்னேற்றத்திற்காக இந்தத் திட்டத்தில் 92 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

17. மத்திய அரசாங்கத்தின் திட்டத்தின்கீழ் நடைபெற்றுவரும் பல்வேறு வீடு கட்டும் திட்டங்களும் திருப்திகரமாக முன்னேறி வருகின்றன. மத்திய அரசாங்க நிதி உதவியுடன் ஆலைத் தொழிலாளருக்கு வீடு கட்டும் திட்டத்தின்கீழ் இப்பொழுதுள்ள வேலைகளை முடிப்பதற்கும், சிவகாசியிலும் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் வெள்ளனூர் என்ற ஊரிலும் புது வேலைகள் தொடங்குவதற்காகவும் 21 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. குறைந்த ஊதியம் பெறுவோர்க்கு வீடுகள் கட்டும் திட்டத்தின்கீழ் சுமார் 800 வீடுகள் கட்டப்பட்டு வருகின்றன. மேலும், 500 வீடுகள் கட்ட ஒரு புதுத் திட்டம் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்திற்காகக் கூட்டுறவு சங்கங்களுக்கு 15 லட்ச ரூபாயும், நகர அபிவிருத்தி டிரஸ்டுக்கு 17 லட்ச ரூபாயும், ஊராட்சி மன்றங்களுக்கு 6 லட்ச ரூபாயும் ஒதுக்கப்பட்டுள்ளது. சேரிகளைத் திருத்த 60 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ் சென்னை நகரில் 20 சேரிகளைத் தேர்ந்தெடுத்து அவற்றைச் சீர்படுத்தி 4,000 குடும்பங்கள் வாழ வகை செய்யப்படும். நகர வீடுகள் கட்டும் ராஜ்யத் திட்டங்களின் கீழ் கூட்டுறவு சங்கங்களுக்கு 17 லட்ச ரூபாயும், நகர அபிவிருத்தி டிரஸ்டுக்கு 17 லட்ச ரூபாயும் கடன் தர வசதி செய்யப்பட்டுள்ளது. போலீஸ் ஊழியர்களுக்கு வீடுகள் கட்டுவது துரிதப்படுத்தப்படும். வரும் ஆண்டில் அதற்காக 75 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. அண்மையில் இராமநாதபுரம் மாவட்டத்தில் நடந்த கலவரங்களின்போது பாழ்பட்ட சுமார் 3,000 வீடுகளைப் புதுப்பிக்க 17 லட்ச ரூபாய் செலவில் ஒரு திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இத்திட்டத்திற்கான செலவில் பாதியை இந்திய அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும். வீடுகள் கட்ட நடந்து வரும் பல்வேறு முயற்சிகளையும் ஒருமுகப்படுத்தும் நோக்கத்துடன் ராஜ்ய வீட்டு வசதிக் குழு ஒன்றை (State Housing Board) அரசாங்கம் அண்மையில் அமைத்துள்ளது. வீட்டு வசதிகள்.

18. நம் ராஜ்யத்திலுள்ள சாலை அமைப்பு நம் நாட்டிலேயே சிறந்தது. அச்சாலை அமைப்புக்கு மேலும் பல அபிவிருத்திகள் தொடர்ந்து செய்யப்படுகின்றன. இவற்றைப் பராமரித்து வர ஆண்டுக்கு 2 கோடி ரூபாய் ஒதுக்கப்படுகிறது. அதில் 60 லட்ச ரூபாய் ஆண்டுதோறும் 500 மைல் நீளத்திற்கு முக்கியமான இடங்களில் பாதைகளில் கருந்தளம் (black-topping) இட செலவிடப்படுகிறது. இந்த வரவு செலவுத் திட்டத்தில் புது வேலைகளுக்காக ராஜ்ய நிதியிலிருந்து 96 லட்ச ரூபாயும், மத்திய ரோடுகள் நிதியிலிருந்து 68 லட்ச ரூபாயும் ஒதுக்கப்பட்டுள்ளன. சாலைகள்.

[Sri C. Subramaniam] [1st March 1958

ஈரோட்டில் காவிரியைக் கடக்கவும், திருப்புவனத்தில் வைகையைக் கடக்கவும், ஆற்காடு–திண்டிவனம் சாலையில் சேயாற்றைக் கடக்கவும், ஆற்காடு–வந்தவாசி சாலையில் கமந்தலநாக நதியைக் கடக்கவும் பெரிய பாலங்கள் கட்ட நிதி ஒதுக்கியுள்ளது. புதுப் பாதைகள் வேலைகளுக்காக ஜில்லா போர்டுகளுக்கும் பஞ்சாயத்துப் போர்டுகளுக்கும் மான்யம் வழங்க 33 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. தூசியற்ற தளம் அமைக்க முனிசிபாலிட்டிகளுக்கும் பஞ்சாயத்துக்களுக்கும் மான்யமாக 12 லட்ச ரூபாயும் கடனாக 8 லட்ச ரூபாயும் தர வசதி செய்யப்பட்டுள்ளது. நீலகிரி மலையில் இயற்கைக் காட்சி இடங்களுக்குச் செல்லும் பாதைகளைச் செம்மைப்படுத்த நீலகிரி ஜில்லா போர்டுக்கு விசேஷ மான்யமாக 2 லட்ச ரூபாய் அளிக்கப்படும்.

மருத்துவம், சுகாதாரம்.

19. மருத்துவ வசதிகளைப் பொருத்தவரை 13 லட்ச ரூபாய் செலவில் செங்கற்பட்டு, கடலூர், பாளையங்கோட்டை, வேலூர், உதகமண்டலம், தஞ்சாவூர் ஆகிய ஊர்களில் உள்ள மாவட்ட தலைமை ஆஸ்பத்திரிகளுக்கு அபிவிருத்திகள் செய்யப்படும். சேயாறு, விருத்தாசலம், ஸ்ரீபெரும்புதூர், பவானி, திருப்பத்தூர், அரந்தாங்கி, ஸ்ரீவைகுண்டம், ஜெயங்கொண்டான், ஒசூர் ஆகிய இடங்களில் ஊராட்சி மன்றங்களால் இப்பொழுது நடத்தப்படும் மருந்து சாலைகள் அரசாங்க நிர்வாகத்தின்கீழ் கொண்டுவரப்படும். பல்வேறு தாலுக்காத் தலைமை நிலைய ஆஸ்பத்திரிகளை விரிவாக்குவதற்கு 11 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் 80 பிரதம ஆரோக்கிய நிலையங்கள் திறக்கத் திட்டமிட்டுள்ளோம். அவற்றில் 52 நிலையங்களை ஏற்கனவே திறந்து விட்டோம். இன்னும் 9 புது நிலையங்கள் வரும் ஆண்டில் திறக்கப்படும். கிராமங்களிலுள்ள இந்த நிலையங்களுக்குச் செல்வதற்குத் தூண்டுகோலாக டாக்டர்களுக்கு ஒரு விசேஷப் படி தர முடிவு செய்துள்ளோம். அவர்களுக்குக் குடியிருப்பு வசதி செய்து தரவும் ஏற்பாடு செய்து வருகிறோம். சென்னை நகரத்திலும், மதுரையிலும் மருத்துவக் கல்விப் பயிற்சி நடக்கும் ஆஸ்பத்திரிகளுக்கு 57 லட்ச ரூபாயில் அபிவிருத்திகள் செய்யப்படும். பொது சுகாதாரத்தைப் பொறுத்தவரையில் நகரக் குடிநீர் வசதிக்காக இப்பொழுது நடந்துவரும் திட்டங்களை முடிப்பதற்காக 86 லட்ச ரூபாயும் கிராமக் குடிநீர் வசதிக்காக 60 லட்ச ரூபாயும் ஒதுக்கப்பட்டுள்ளன. 105 தாய் சேய் நல நிலையங்களைத் திறக்கவும் 900 தாய்களுக்கு பயிற்சி அளிக்கவும் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

கல்வி.

20. கல்வித்துறையில் 1956-57-ம் ஆண்டில் 10 கோடியே 60 லட்ச ரூபாய் செலவு செய்தோம். நடப்பு ஆண்டுக்கான திருத்தப்பட்ட மதிப்பீடு 11 கோடியே 47 லட்சமாகும். ராஜ்ய சீரமைப்பின் காரணமாக ராஜ்யத்தின் நிலப் பரப்பும் மக்கள் எண்ணிக்கையும் குறைந்தபோதும் நாம்

1st March 1958] [Sri C. Subramaniam]

கல்விக்காக இந்த ஆண்டில் செலவு செய்யும் தொகை ஏறக் குறைய 1 கோடி உயர்ந்துள்ளது. வரும் ஆண்டில் நாம் 12 கோடியே 4 லட்ச ரூபாய் செலவு செய்யத் தொகை ஒதுக்கியுள்ளோம். வழக்கம்போல் இந்த மொத்தச் செலவில் பாதிக்குமேல் ஆரம்பக் கல்விக்கே செலவாகும். ஆரம்பக் கல்விக்காக 1956-57-ல் 4 கோடியே 91 லட்ச ரூபாய் செல வாயிற்று. 1957-58-ல் செலவு 6 கோடியே 54 லட்சம் ரூபாய். வரும் ஆண்டில் 6 கோடியே 59 லட்சம் ரூபாய் செலவாகும். கல்விப் பிரச்னைகளை ஆராய்ந்த சென்னை சட்ட சபைக் குழு சிபார்சு செய்ததற்கு இணங்க ஆரம்பப்பள்ளியில் படிக்கும் குழந்தைகளுக்கு மதிய உணவு இலவசமாக வழங்க 20 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. ஆரம்பப்பள்ளியில் புதிதாகச் சேர்க்கப்படும் குழந்தைகளின் எண்ணிக்கை ஆண்டுக்கு 1 லட்சம் வீதம் பெருகி வருகிறது. ஒவ்வொரு ஆண்டும் சுமார் 1,700 புது வகுப்புகள் தொடங்க வசதி செய்யும் வகையில் பள்ளிக்கூடங்கள் விரிவாக்கப்பட்டு அத்துடன் புதிய பள்ளிகளும் திறக்கப்படுகின்றன. புதுத் திட்டங்களுக்கான இச்செலவில் மத்திய அரசாங்கமும் பங்கு கொள்கின்றது. இச்செலவைப் பகிர்ந்துகொள்ளும் முறையில் மத்திய அரசாங்கத்திடமிருந்து 1956-57-ம் ஆண்டில் நமக்கு 32 லட்ச ரூபாய் கிடைத்தது. இந்த ஆண்டில் 1 கோடியே 19 லட்ச ரூபாய் கிடைக்குமென்றும் வரும் ஆண்டில் இது 1 கோடியே 35 லட்சமாக உயருமென்றும் நாம் எதிர்பார்க் கின்றோம்.

21. தொழிற் கல்வி வளர்ச்சியில் விசேஷ கவனம் தொடர்ந்து செலுத்தி வருகின்றோம். முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில் நம் ராஜ்யத்தின் பொறியியற் கல்லூரியில் 647 மாணவர்கள் சேர்க்கவும் பல்தொழிற் பயிற்சிக் கழகங்களில் 1,142 மாணவர்களைச் சேர்க்கவும் வசதி இருந்தது. இப்பொழுது அவற்றை விரிவாக்கிப் பொறியியற் கல்லூரிகளில் 1,132 மாணவரைச் சேர்க்கவும் பல்தொழில் பயிற்சிக் கழகங்களில் 1,752 மாணவரைச் சேர்க்கவும் வசதிகள் செய்துள்ளோம். தொழிற் கல்வி நிர்வாக இலாகா ஒன்றை நாம் அமைத்துள்ளோம். ராஜ்ய தொழிற் கல்வி பயிற்சிக் குழு ஒன்றும் நிறுவப்பட்டுள்ளது. இந்த அமைப்புகள் வேலை செய்யத் தொடங்கிவிட்டன. தொழிற் கல்வி நிலையங்களின் நிர்வாகத்தைப்பற்றியும் ஆசிரியர்கள் அமர்த்து வது பற்றியும் உள்ள பல்வேறு பிரச்னைகளைச் சமாளிக்க இந்த அமைப்புகள் உதவும் என்று எதிர்பார்க்கலாம். தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாததான தொழில் நுட்ப நிபுணர் களைப் போதிய அளவில் தொடர்ந்து தயார் செய்வதிலும் இந்த அமைப்புகள் உதவும். தென்னிந்தியாவிற்கான உயர் தொழிற் கல்வி நிலையத்தைச் சென்னையில் அமைப்பது குறித்து நாம் மத்திய அரசாங்கத்துடன் நடத்திவந்த பேச்சு

தொழிற் கல்வி.

[Sri C. Subramaniam] [1st March 1958

வார்த்தைகள் நமக்குச் சாதகமாக முடிவடைந்துள்ளன என்ற செய்தியை இச்சபை வரவேற்கும். இந்த கல்வி நிலையத்திற்குத் தேவையான நிலம் பற்றியும் முடிவு செய்துவிட்டோம். நிலையத்தை நிறுவுவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் விரைவில் எடுக்கப்படும் என்று எதிர்பார்க்கிறோம்.

*பின்தங்கிய வகுப்பினர் நலன்.*

22. ஹரிஜனங்கள், பின்தங்கிய வகுப்பினர் ஆகியோருடைய நலனிலும் அரசாங்கம் தொடர்ந்து விசேஷ அக்கறை காட்டி வருகின்றது. இம்மக்களின் நலன்களை வளர்க்கும் திட்டங்களுக்கு இந்த வரவு செலவுத் திட்டத்தில் 2 கோடியே 33 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. நடப்பு ஆண்டில் செலவுக்கு ஒதுக்கப்பட்ட தொகையை விட இத்தொகை 40 லட்சம் ரூபாய் அதிகம். இத்திட்டங்களின் கீழ் 15,000 மாணவர்களுக்கு உதவிச் சம்பளங்கள் வழங்க 28 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. 12,000 மாணவர்கள் விடுதிகளில் தங்க வசதி செய்ய மானியமாக 22 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. ஹரிஜனப் பள்ளியில் மதிய உணவுக்காக 27 லட்ச ரூபாயும், 5,000 வீடுகள் கட்டுவதற்கு மானியமாக 27 லட்சம் ரூபாயும், 5,800 ஜோடி மாடுகள் வாங்குவதற்கு மானியமாக 18 லட்ச ரூபாயும், ஹரிஜனங்களுக்கென 175 கிணறுகள் தோண்ட 5 லட்ச ரூபாயும், சிறு குடிசைத் தொழில்களை வளர்க்க 9 லட்ச ரூபாயும் ஒதுக்கப்பட்டுள்ளன.

*1957-58-ம் ஆண்டு : திருந்திய மதிப்பீடுகள்.*

23. நடப்பு ஆண்டிற்கான வரவு செலவுத் திட்டத்தை நாம் தயாரித்தபடி, அதிகப்படியான வரி விதிப்பிலிருந்து கிடைக்கும் $1\frac{1}{2}$ கோடி ரூபாயைச் சேர்த்து 57 கோடியே 95 லட்ச ரூபாய் வருவாய் கிடைக்குமென்றும், 61 கோடியே 32 லட்ச ரூபாய் செலவாகும் என்றும், ஆகவே 3 கோடியே 33 லட்சம் ரூபாய் துண்டு விழும் என்றும் கணக்கிடப்பட்டிருந்தது. இப்பொழுது திருத்தப்பட்ட மதிப்பீட்டின்படி வருவாய் 60 கோடியே 41 லட்சம் ரூபாயாகவும், செலவு 60 கோடியே 36 லட்ச ரூபாயாகவும், ஆகவே 5 லட்சம் உபரியாய் நிற்கும் என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. வருவாய் இனத்தில் கணிசமான முன்னேற்றம் காணப்படுகிறது. இதற்கு முக்கிய காரணம், நடப்பு ஆண்டில் இருந்து அமல் வந்துள்ள நிதிக் கமிஷன் முடிவேயாகும்.

*நிதிக் கமிஷன்.*

24. நிதிக் கமிஷன் முன்பு நாம் நமது வாதத்தை எடுத்துரைத்தபோது அபிவிருத்தித் திட்டங்களின் மீது ராஜ்யங்களுக்கு ஏற்படும் அதிகப்படியான செலவுகளை ஈடு செய்யவும், மத்திய அரசாங்க ஊழியர்களின் சம்பளத்திற்கும் ராஜ்ய அரசாங்க ஊழியர்களின் சம்பளத்திற்கும் இடையே உள்ள வித்தியாசத்தைக் குறைப்பதற்கும் வருமான வரியிலும் உள்நாட்டு வரியிலும் ராஜ்யங்களுக்கு அதிகப் பங்கு தரவேண்டுமென்று வற்புறுத்தி இருந்தோம். நிதி பற்றுக்குறையை ஈடு கட்டப் புதிய நாணயப் பெருக்க நடவடிக்கைகள் (deficit financing) மூலம், மத்திய அரசாங்கம் அதிக வருவாய்

திரட்டுகிறது. ஆகவே மத்திய அரசாங்கம் நமக்குத் தரும் கடன்கள் மீது வட்டி விகிதத்தைக் குறைக்க வேண்டும் என்றும் நாம் வற்புறுத்தியிருந்தோம். கமிஷன் தன்னுடைய முடிவுகளில் நம்முடைய கோரிக்கைகள் சிலவற்றைத்தான் ஏற்றுள்ளது. வருமான வரியிலிருந்து ராஜ்யங்களுக்குக் கிடைக்கும் பங்கு 55 சதவிகிதத்திலிருந்து 60 சதவிகிதம் உயர்த்தப்பட்டுள்ளது. இதனால் ஆண்டுக்கு 94 லட்சம் ரூபாய் நமக்கு அதிகமாகக் கிடைக்கக்கூடும். மத்திய உள் நாட்டு வரியைப் பொறுத்தவரை, ராஜ்யங்களுக்கும் மத்திய அரசாங்கத்துக்குமிடையே பகிர்ந்து கொள்ளவேண்டிய வரிப் பட்டியலில் மேலும் சில பொருள்களின் மீது விதிக்கப்படும் வரிகள் சேர்க்கப்பட்டுள்ளன. ஆனால் ராஜ்யங்களின் பங்கு 40 சதவிகிதத்திலிருந்து 25 சதவிகிதத்திற்குக் குறைக்கப் பட்டுள்ளது. மொத்தத்தில் நமக்கு ஒரு ஆண்டில் இதன் மூலம் 44 லட்சம் ரூபாய் அதிகம் கிடைக்கக் கூடும். நடப்பு ஆண்டில் மத்திய அரசாங்கத்தால் ரயில்வே பிரயாணிகளின் கட்டணம் மீது விதிக்கப்பட்டுள்ள புது வரி யிலிருந்து கிடைக்கும் வருவாய், ரயில் பாதை அளவை அடிப் படையாகக் கொண்டு ராஜ்யங்களுக்கிடையே பகிர்ந்து தரப் படும். இதன் மூலம் நடப்பு ஆண்டின் ஒரு பகுதிக்காக நமக்கு 34 லட்ச ரூபாயும், ஒரு முழு ஆண்டில் 64 லட்ச ரூபாயும் கிடைக்கக்கூடும். இந்த சிபாரிசுகள் அனைத்தும் இந்திய அரசாங்கத்தால் ஏற்கப்பட்டுள்ளன. இதனால் நடப்பு ஆண்டில் நம்முடைய வருவாய் இனத்தில் 1 கோடியே 74 லட்ச ரூபாய் உயர்வும், வரும் ஆண்டில் 2 கோடியே 2 லட்சம் ரூபாய் உயர்வும் ஏற்படும். மத்திய அரசாங்கத்தி லிருந்து ராஜ்யங்கள் பெற்றுள்ள பல்வேறு கடன்களை எல்லாம் சேர்த்து அவற்றிற்குச் சிறிது குறைந்த வட்டி நிர்ணயம் செய்ய வேண்டுமென்று கமிஷன் சிபார்சு செய்துள்ளது. இதன் மூலம் நமக்கு ஒரு ஆண்டுக்கு 60 லட்ச ரூபாய் வரை நிவாரணம் கிடைத்திருக்கும். ஆனால் இந்த சிபார்சை மத்திய அரசாங்கம் இன்னும் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆதலால் இந்த வரவு செலவுத் திட்டத்தில் இதை நாம் கணக்கில் எடுத்துக் கொள்வதற்கில்லை. ராஜ்ய அரசாங்க ஊழியர் களின் ஊதியத்தை உயர்த்துவதற்காக உதவி வேண்டும் என்ற நமது கோரிக்கையைக் கமிஷன் நிராகரித்து விட்டது. அதற்கு மாறாக 1956-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் நாம் இந்த ஊழியர்களின் கிராக்கிப் படியை 5 முதல் 7 ரூபாய் வரை உயர்த்தியதை முன்னிட்டு நமக்கு மத்திய அரசாங் கத்திடமிருந்து கிடைக்கவேண்டிய உதவியை நிறுத்திவிடலாம் என்று கமிஷன் சிபார்சு செய்துள்ளது. இதனால் கமிஷனின் சிபார்சுகளிலிருந்து நமக்குக் கிடைக்கும் உதவியில் ஒரு பகுதி குறைந்துவிடும். தற்போதுள்ள தவிர்க்கமுடியாத செலவினங்கள் மீது ராஜ்யங்களின் வருவாய் பற்றுக்குறைகளை

[Sri C. Subramaniam] [1st March 1958

ஈடுசெய்வதற்கான அளவுமட்டுமே மத்திய அரசாங்கம் உதவி செய்யவேண்டும் என்பது கமிஷனுடைய கொள்கை. கமிஷன் தன்னுடைய சிபார்சில் இன்னும் சற்று தாராளமான போக்கைப் பின்பற்றி இருக்கலாம் என்று நாம் எண்ண இடமுண்டு. ஆயினும் மத்திய அரசாங்கத்தின் வருவாய்க்கும் ஒரு எல்லே உண்டு என்பதையும், பற்பல முரண்பட்ட கோரிக்கைகளேயும் ஈடு செய்யும் கடினமான பொறுப்பு கமிஷனுக்கு இருந்தது என்பதையும் நாம் உணரவேண்டும். ஆகவே அவர்கள் சிபார்சு செய்துள்ளபடி நமக்குக் கிடைத்துள்ள உதவிக்கு நாம் கமிஷனுக்கு நன்றி செலுத்துவோமாக.

வருவாய் வசதிகள்.

25. ராஜ்யங்களும் மத்திய அரசாங்கமும் சேர்ந்து துணி, சர்க்கரை, புகையிலேப் பொருள்கள் மீதிருந்த விற்பனே வரியை ரத்து செய்துள்ளதைக் கனம் அங்கத்தினர்கள் அறிவார்கள். இந்தப் பொருள்களின் மீது விற்பனே வரிக்குப் பதிலாக அதிகப்படியான உள்நாட்டு வரிகள் ஆரம்பக் கட்டத்திலேயே விதிக்கப்படுகின்றன. இதன்மூலம் கிடைக்கும் வருவாய் ராஜ்யங்களிடையே பகிர்ந்தளிக்கப்படுகிறது. 1956-57-ம் ஆண்டில் இப்பொருள்களிலிருந்து நமக்குக் கிடைத்த வருவாயான 2 கோடியே 85 லட்ச ரூபாய்க்குக் குறையாமல் நமக்குக் கிடைத்து வருமென்று மத்திய அரசாங்கம் உறுதியளித்துள்ளது. இவ்வாறு உறுதியளிக்கப்பட்ட குறைந்தபட்சத் தொகைக்குமேல், புது உள் நாட்டு வரியினுல் கிடைக்கும் அதிகப்படியான தொகை பல்வேறு ராஜ்யங்களுக்கும் இடையே, நிதிக்கமிஷன் சிபார்சு செய்துள்ள முறையின் அடிப்படையில் பகிர்ந்து அளிக்கப்படும். அதன் மூலம் நாளடைவில் நமக்கு சற்று அதிகப்படியான வருவாய் கிடைக்குமென்று எதிர்பார்க்கலாம். இந்த வரி விகித மாறுதல் ஏற்படுவதற்கு இந்த ராஜ்யத்தின் முயற்சியே பெருமளவிற்குக் காரணமாகும். இதன்மூலம் ராஜ்யங்களின் வருவாயைப் பாதிக்காமல் இந்தப் பொருள்களில் வர்த்தகம் செய்வோருக்குக் கணிசமான அளவு நிவாரணம் அளிக்க வழி பிறந்தது. உசிதமான இன்னும் சில பொருள்களுக்கு இத்திட்டத்தை விரிவாக்குவது பற்றி பரிசீலனே நடந்து வருகிறது. ராஜ்யத்தின் பல்வேறு வரிகளிலிருந்தும் வருவாய் சற்று பெருகியுள்ளது. குறிப்பாக மோட்டார் வாகனங்கள் மீதுள்ள வரியிலிருந்தும் மத்திய விற்பனே வரியிலிருந்தும் அதிகத் தொகை வசூலாகியுள்ளது. இவற்றின் பயனுய் நமக்கு 1 கோடியே 25 லட்சம் ரூபாய் அதிக வருவாய் கிடைத்துள்ளது. செலவினங்களிலும் 96 லட்ச ரூபாய் செலவு குறைந்துள்ளது. வரவு செலவுத் திட்டத்தின்படி எடுத்துக்கொள்ளவிருந்த சில புதுத் திட்டங்கள் அங்கீகரிக்கப்படுவதில் ஏற்பட்ட காலதாமதமே செலவுகள் குறைவுக்கு முக்கிய காரணமாகும்.

1st March 1958] [Sri C. Subramaniam]

26. இந்த ஆண்டிற்கான மூலதன செலவுகள் 15 கோடியே 49 லட்ச ரூபாயாக இருந்து, இப்பொழுது 16 கோடியே 67 லட்சமாகத் திருத்தி நிர்ணயிக்கப்பட்டுள்ளது. மின்சாரத் திட்டங்களுக்கான தொகை 1—7—1957 முதல் மூலதன வரவு செலவுத் திட்டத்திலிருந்து பிரிக்கப்பட்டு மின்சார போர்டுக்குக் கொடுக்கும் கடனாக இப்பொழுது காட்டப் பட்டுள்ளது. மின்சாரத்தின் மீது மூலதனச் செலவுக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகை 11 கோடியே 62 லட்சத்திலிருந்து, 13 கோடியே 2 லட்சமாக உயர்த்தப்பட்டுள்ளது. இதில் இப்பொழுது நம்மிடமுள்ள நிதி வசதிகள் சுமார் 8 கோடி ரூபாய் அளவுதான். எஞ்சிய 5 கோடி ரூபாயை மின்சாரத் தேய்மான ஈடு நிதியிலிருக்கும் கடன் பத்திரங்களை மின்சார போர்டு விற்பனை செய்துதான் திரட்டவேண்டும். இந்த ஆண்டில் சிறு சேமிப்புத் திட்டத்தின்கீழ் வசூலாகும் தொகையில் நம்முடைய பங்காக 5½ கோடி ரூபாய் கிடைக்கக் கூடும். இதைக்கொண்டு, ரொக்க வசதிகள் நிலைமையில் துண்டு விழும் தொகையை ஈடு செய்யலாம் என்று எதிர் பார்க்கலாம். மூலதன வசதிகள்.

27. 1958-59-ம் ஆண்டின் வரவு செலவுத் திட்ட மதிப் பீடுகளின்படி நமக்கு 62 கோடியே 40 லட்ச ரூபாய் வருவாய் கிடைக்குமென்றும், 63 கோடியே 25 லட்ச ரூபாய் செலவு ஏற்படுமென்றும், ஆகவே 1 கோடியே 35 லட்சம் துண்டு விழுமென்றும் எதிர்பார்க்கிறோம். அரசாங்க ஊழியர்களின் ஊதியத்தை உயர்த்தியதில் மத்திய அரசாங்கத்தின் உதவி இன்னும் சற்று தாராளமாகக் கிடைக்குமென்று இந்த மதிப்பீடுகளைத் தயாரித்து முடித்த பின்பு நமக்குத் தகவல் கிடைத்துள்ளது. இதன்மூலம், ஆண்டுக்கு 30 லட்ச ரூபாய் அதிக மான்யம் கிடைக்கும். ஆகவே துண்டு விழும் தொகை 1 கோடியே 35 லட்சமாக இருந்தது, 1 கோடியே 5 லட்ச மாகக் குறையும். இனம் நிலங்கள் மீது வரி மூலமாகவும் அபிவிருத்திக் கட்டணம் மூலமாகவும் நில வருமான இனத்தில் சற்று அதிகப் பணம் கிடைக்கலாம். மோட்டார் முதலிய போக்குவரத்து வாகனங்களின் எண்ணிக்கை அதிகரித்து வருவதால் மோட்டார் வாகன வரியிலிருந்தும் அதிக வருவாய் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறோம். செலவினங்களைப் பொறுத்தவரை ஜமீன்கள் ஒழிப்பு நிதிக்கு ஆண்டுதோறும் செலுத்திவந்த தொகை 10 லட்ச ரூபாயி லிருந்து, இவ்வாண்டில் 50 லட்ச ரூபாயாக உயர்த்தப் பட்டுள்ளது. ஜமீன்தார்களுக்கு இறுதியாகத் தரவேண்டிய நஷ்ட ஈட்டுத் தொகைகளுக்காக நிதி வசதிகளைச் சேமிக்கும் பொருட்டு இவ்வாறு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. நிதிக் கமிஷன் சிபார்சு செய்ததற்கு இணங்கப் பஞ்ச நிவாரண நிதிக்கு ஒதுக்கப்படும் தொகை 5 லட்சத்திலிருந்து இவ்வாண்டில் 50 லட்சமாக உயர்த்தப்பட்டுள்ளது. 1958-59 : வரவு செலவுத் திட்ட மதிப்பீடுகள்.

[Sri C. Subramaniam] [1st March 1958

சலுகைகள்.

28. கெஜட் பதிவில்லாத அரசாங்க ஊழியர்களின் குழந்தைகள் இப்பொழுது மூன்றும் படிவம்வரை முழுச் சம்பளச் சலுகையும் உயர்நிலைப்பள்ளி வகுப்புகளில் அரைச் சம்பளச் சலுகையும் பெற்று வருவதைக் கனம் அங்கத்தினர்கள் அறிவார்கள். அவர்களுக்கு உயர்நிலைப்பள்ளி வகுப்புகளிலும் முழுச் சம்பள சலுகை தருவதற்கு இந்த வரவு செலவில் திட்டமிட்டுள்ளோம். விவசாய இலாகா டெமான்ஸ்டிரேட்டர்கள் சம்பளம் இதுவரை 100—5—140—10—220 ரூபாயாக இருந்தது. இனி 135—5—220—10—270 ரூபாயாக உயர்த்தப்படும். நெடுஞ்சாலை இலாகாவில் போக்குவரத்து, இயந்திரப் பழுது பார்க்கும் சாலையில் வேலை செய்யும் ஊழியர்கள், ராஜ்ய அரசாங்க நிரந்தர ஊழியர் பகுதியில் சேர்த்துக்கொள்ளப்படுவார்கள். விற்பனை வரி அமைப்பைத் திருத்துவது பற்றி டாக்டர் லோகநாதன் செய்துள்ள சிபார்சுகளை இப்பொழுது அரசாங்கம் பரிசீலனை செய்து வருகிறது. விற்பனை வரிச் சட்டத்தைத் திருத்துவதற்காக ஒரு விரிவான மசோதா விரைவில் கொண்டுவரப்படும். அவர் சிபார்சு செய்ததுபோல் 10 ஆயிரம் ரூபாய் முதல் 25 ஆயிரம் ரூபாய்க்கு உட்பட்டு வியாபாரம் செய்பவர்களை விரிவான கணக்கு எழுதும் பொறுப்பிலிருந்து விடுவிக்கும் பொருட்டு, உத்தேச மதிப்பின்படி மொத்தமாக வரி செலுத்த அவர்கள் அனுமதிக்கப்படுவார்கள். இப்பொழுது பலமுனை விற்பனை வரி விதிக்கப்படும் பற்பல பொருள்கள் மீது இனி ஒருமுனை வரி விதிக்கப்படும். இந்த மாறுதல்களால் நிதி நிலைமை எவ்வாறு பாதிக்கப்படும் என்பதை இப்பொழுது அறுதியிட்டுக் கூறமுடியாது. ஆனல் இவற்றின் விளைவாய் வருவாய் அதிகமாகக் குறையாது என்ற அடிப்படையில் வரவு செலவுத் திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது.

புதிய வரிகள்.

29. நிதிக்கமிஷன் தீர்ப்புக்குப் பின்பு, அடுத்த சில ஆண்டுகளுக்கு மத்திய அரசாங்கத்திடமிருந்து நாம் மேலும் உதவி எதிர்பார்ப்பதற்கு இடமில்லை. ஆகவே வருவாய் இனத்தில் துண்டு விழும் 1 கோடியே 5 லட்ச ரூபாயை நாம் சரிக்கட்டாமல் விடமுடியாது. ராஜ்யத்தின் ஐந்தாண்டுத் திட்டத்தின் அளவைப்பற்றித் திட்டக்குழுவுடன் நாம் விவாதித்தபோது வருவாய் இன வரவு செலவைச் சரிகட்டுவதற்குப் போதிய நிதி வசதிகள் திரட்டமுடியும் என்று குறிப்பாக உறுதி கூறியுள்ளோம். இந்த ஆண்டில் இன்னும் பல புதிய திட்டங்களை நாம் ஏற்றுக்கொள்ளக்கூடும். இதனல் துண்டு விழும் தொகை இன்னும் அதிகமாகலாம். ஆகவே கீழ்க்கண்ட புது வரி விதிப்புத் திட்டங்களை நான் கொண்டுவரவேண்டியுள்ளது :—

(அ) பெட்ரோலைத் தவிர மற்ற மோட்டார் எண்ணெய், அதாவது டீசல் எண்ணெய் மேலுள்ள விற்பனை வரி காலனுக்கு 10 நயா பைசாவிலிருந்து 35 நயா பைசாவாக உயர்த்தப்படும். இதன் மூலம் ஒரு முழு ஆண்டில் 70 லட்ச ரூபாய் கிடைக்கும்.

(ஆ) பொழுதுபோக்கு வரியின் முதல் கட்டத்தில் இப்பொழுது வசூலிக்கப்படும் 20 சதவிகிதத்திற்குப் பதிலாக 25 சதவிகிதமாகவும், இரண்டாவது கட்டத்தில் 25 சதவிகிதத்திற்குப் பதிலாக 33⅓ சதவிகிதமாகவும், மூன்ருவது கட்டத்தில் 33⅓-க்குப் பதிலாக 40 சதவிகிதமாகவும் உயர்த்தப்படும். டூரிங் சினிமாக்களிடமிருந்தும் காட்சி வரி வசூலிக்கப்படும். சினிமாக்கள், குதிரைப்பந்தயம் இரண்டையும் தவிர மற்ற எல்லாப் பொழுதுபோக்குகள் மீதுள்ள வரி ரத்து செய்யப்படும். இதனுல் நமக்கு அதிகப்படியாக 30 லட்ச ரூபாய் வருவாய் கிடைக்கலாம். இதில் 90 சதவிகிதம் ஊராட்சி மன்றங்களைச் சேரும். சென்னை கார்ப்பரேஷனுக்கு அதன் பங்காக 6 லட்ச ரூபாய் கிடைக்கக்கூடும்.

(இ) இப்பொழுது தோட்டச் சொத்துக்கள்மீதுதான் வருமான வரி விதிக்கப்படுகிறது. இனி 3,000 ரூபாய் வரை விதிவிலக்கு அளித்து, மற்ற எல்லா நிலச் சொத்துக்கள்மீதும், இதே முறைப்படி விவசாய வருமான வரி விதிக்கப்படும். வரி செலுத்துவோர் மொத்த வருமானத்தை நிர்ணயிப்பதற்கு விவசாயத்துறை அல்லாத மற்ற துறைகளிலிருந்து கிடைக்கும் வருவாயும் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படும். விவசாயப் பகுதி வருமானத்துக்கு மட்டும் மேல் கட்டங்களுக்கு உரிய உயர்ந்த விகித அடிப்படையில் வரி விதிக்கப்படும். விரிவான கணக்கு வைக்கக்கூடிய பொறுப்பிலிருந்து விடுவிக்கும் பொருட்டு உத்தேச மதிப்பின்பேரில் மொத்தமாக வரி செலுத்தும் சலுகை சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு அளிக்கப்படும். 1954-ம் ஆண்டு சென்னை 19-வது சட்டத்தின் கீழ் பெரிய நிலச் சொத்துக்கள் மீது இப்பொழுது விதிக்கப்படும் உபரி வரி ரத்து செய்யப்படும். இந்த வருமான வரி மூலம் எவ்வளவு வருவாய் கிடைக்கும் என்று மதிப்பிடுவது கஷ்டம். ஆனுல், இந்த வரவு செலவுத்திட்ட கணக்குக்காக இதைச் சுமார் 70 லட்சமாக மதிப்பிடலாம். நில உடைமைக்கு உச்ச வரம்பு நிர்ணயிக்கப்பட்டு அமலுக்கு வந்தவுடன் இந்த வரி பயனற்றதாகிவிடும். ஆனுல், ஒரு உச்ச வரம்பை நிர்ணயிக்க நாம் முடிவு செய்துள்ள இந்த நேரத்தில் அந்த வரம்புக்கு மேற்பட்டு அதிக நிலம் வைத்திருப்போருக்குக் கிடைக்கும் நன்மையில் ஒரு பகுதியை இந்த இடைக்காலத்தில் மக்களின் பொது நலனுக்காக அரசாங்கம் எடுத்துக்கொள்வது சமூக நீதிக்கு ஒத்ததே என்று கருதுகிறேன்.

இந்தப் புதிய வரி விதிப்புகள் மூலம் ஒரு முழு ஆண்டில் நமக்கு 1 கோடியே 70 லட்ச ரூபாய் கிடைக்கக்கூடும். இதில் 27 லட்ச ரூபாய் ஊராட்சி மன்றங்களைச் சாரும். இந்த யோசனைகள் பேரிலும், குறிப்பாக விவசாய வருமான வரியைப் பொருத்தவரையிலும் சட்டபூர்வமான நடவடிக்கைகளை எடுக்கக் காலதாமதம் ஏற்படுமாதலால்

[Sri C. Subramaniam] [1st March 1958

அடுத்த ஆண்டில் அரசாங்கத்திற்குக் கிடைக்கக்கூடிய நிகர வருவாய் 1 கோடியே 20 லட்சமாகத்தான் இருக்கும். ஆகவே, வரவு செலவுத்திட்டத்தில் 1 கோடியே 5 லட்சம் ரூபாய் துண்டு விழும் நிலை மாறி, 15 லட்ச ரூபாய் உபரியாக நிற்கும்.

மூலதனச் செலவு.

30. இந்த ஆண்டுக்கான மூலதனச் செலவு 9 கோடியே 73 லட்ச ரூபாயாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இதில் 2 கோடியே 39 லட்ச ரூபாய் கட்டிடங்களுக்காகவும், 1 கோடியே 69 லட்ச ரூபாய் நீர்ப்பாசனத்திற்காகவும், 70 லட்ச ரூபாய் சிறிய பாசனத் திட்டங்களுக்காகவும், 1 கோடியே 43 லட்ச ரூபாய் இயந்திரத் தொழில் வளர்ச்சிக்காகவும், 96 லட்ச ரூபாய் சாலைகளுக்காகவும், 35 லட்ச ரூபாய் பஸ்கள் வாங்குவதற்காகவும், எஞ்சியது பல்வேறு சிறு இனங்களுக்காகவும் செலவிடப்படும். மின்சாரத் திட்டங்களுக்கான மூலதனச்செலவு 11 கோடியே 94 லட்ச ரூபாயாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இச்செலவுக்கு மின்சார போர்டு இப்பொழுது பொறுப்பேற்றுக்கொள்வதனுல், ராஜ்ய வரவு செலவுத் திட்டத்தில் இந்தக் கணக்கு விவரங்கள் சேர்க்கப்படவில்லை. மின்சார போர்டுக்கு 4 கோடியே 10 லட்ச ரூபாய் கடன் தர வசதி செய்யப்பட்டுள்ளது. அதற்கு மேலும் தேவையான தொகையை போர்டு தனது சொத்து தேய்மான ஈடு நிதியில் தன்வசமுள்ள சுமார் 3 கோடி ரூபாய் மதிப்புள்ள கடன் பத்திரங்களை விற்பதன் மூலமாகவும் தன் வருவாயிலிருந்தும் திரட்டவேண்டும். கடனுக வழங்கப்படும் மற்ற தொகைகளில் முக்கியமானவை, சென்னை கார்ப்பரேஷனுக்கு 42 லட்ச ரூபாய், சென்னை நகர அபிவிருத்தி டிரஸ்டுக்கு 58 லட்ச ரூபாய், குடிநீர் வசதிக்காக முனிசிபாலிட்டிகளுக்கு 89 லட்ச ரூபாய், தொழில்களுக்கு அரசாங்க உதவியாக 25 லட்ச ரூபாய், கூட்டுறவு முறையில் வீடுகட்டும் சங்கங்களுக்கு 35 லட்ச ரூபாய், கிராம தானக் கிராமங்களில் விவசாயிகளுக்கு 20 லட்ச ரூபாய் ஆகியவை. மின்சார போர்டுக்குத் தரப்படும் கடனைத் தவிர, மற்ற இனங்களில் கடனுகவும் முன்பணமாகவும் செலவு செய்யப்படவிருக்கும் தொகை 3 கோடியே 53 லட்ச ரூபாய். இவ்வாருக ரொக்க வசதிகளில் சுமார் 6½ கோடி ரூபாய் துண்டு விழும். சிறு சேமிப்புத் திட்ட வசூலில் நமக்குக் கிடைக்கும் பங்கைக் கொண்டும், பொருளாதார நிலைமை சாதகமாக இருந்தால் பொதுமக்களிடமிருந்து கடன் எழுப்பியும் இதை ஈடு செய்ய முடியும் என்று எதிர் பார்க்கிறேம்.

ஐந்தாண்டுத் திட்ட செலவுகள்.

31. நடப்பு ஆண்டின் வரவு செலவுத் திட்டத்தை நாம் தயாரித்தபோது ஐந்தாண்டுத் திட்டத்தின் பல்வேறு வேலைகளுக்காக 31 கோடியே 79 லட்ச ரூபாய் செலவாகும் என்று மதிப்பிட்டிருந்தோம். விவசாய அபிவிருத்தி, மண்வள பாதுகாப்பு, மருத்துவத்துறை, வீடுகள் கட்டுவது, கிராமக் கைத்

தொழில்கள், கைப்பணித் தொழில்கள் போன்ற துறைகளில் செலவுக்கு ஒதுக்கப்பட்டிருந்த தொகைகளில் ஓரளவு செலவாகாமல் மிஞ்சி விடக்கூடும். திட்டங்களை ஏற்றுக்கொள்வதில் தாமதம், நில ஆர்ஜித நடவடிக்கைகளில் தாமதம், சிமிட்டி, எஃகுபோல் கட்டிடங்களுக்குத் தேவையான பொருள்களில் ஏற்பட்டுள்ள பற்றுக்குறை ஆகியவையே இந்த இனங்களில் செலவு குறைவுக்குக் காரணங்கள். ஆனால், நீர்ப்பாசன, மின்சாரத் திட்டங்களுக்காக மிக அதிகப்படியாக செலவு ஏற்பட்டுள்ளதால் அச்செலவு மற்ற இனங்களில் செலவாகாமல் எஞ்சிய தொகையையும் மிஞ்சிவிடும். திருத்தப்பட்ட மதிப்பீடுகளின்படி திட்ட வேலைகளுக்காக 32 கோடியே 31 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. முதலில் ஒதுக்கிய தொகையை விட இது 52 லட்ச ரூபாய் அதிகம். இப்பொழுது ஒதுக்கப்பட்டுள்ள தொகைகள் முழுவதையும் செலவு செய்யும் அளவு, இலாகாக்கள் வேகமாகவும் தீவிரமாகவும் வேலை செய்யும் என்று நாம் நம்பலாம்.

32. வரும் ஆண்டிற்கான திட்டவேலைகள் பற்றி சென்ற டிசம்பரில் திட்டக்குழுவுடன் விவாதிக்கப்பட்டு, அதன் பயனாக 30 கோடியே 47 லட்ச ரூபாய் செலவு செய்வதெனத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. தற்போது மத்திய அரசாங்கம் அளித்து வரும் உதவி முறைகளுக்கு இணங்க மத்திய அரசாங்கத்தினிடமிருந்து நமக்கு 18 கோடி ரூபாய் வரை கடன்களாகவும் மான்யங்களாகவும் கிடைக்கும் என்று உறுதி கிடைத்துள்ளது. ஆகவே மிஞ்சிய 12 கோடியே 47 லட்ச ரூபாயை நாமேதான் திரட்டவேண்டும். 1958-59-ம் ஆண்டில் எல்லா ராஜ்யங்களின் உதவிக்காக மத்திய அரசாங்கத்தால் ஒதுக்கப்பட்டுள்ள தொகை 200 கோடி ரூபாய்தான். ஆகவே இதற்குமேல் மத்திய அரசாங்கத்திடமிருந்து அதிகமாக உதவி எதிர்பார்ப்பதற்கில்லை. திட்ட வேலைகளுக்காக இன்னும் அதிகம் செலவு செய்ய நாம் விரும்பக்கூடும். ஆனால் அதற்கு அதிகப்படியாகத் தேவையாகும் நிதி வசதிகளை நாம் நம் ராஜ்யத்திற்குள்ளாகவே திரட்டிக் கொள்ளவேண்டும். அந்த முறையில் திட்டத்தை விரிவாக்குவதைத் திட்டக்குழுவும் நிச்சயமாக ஏற்றுக்கொள்ளும். ஆனால் இப்பொழுது நிர்ணயிக்கப்பட்டுள்ள ராஜ்ய வரம்புக்கு உட்பட்டு அநேகமாக எல்லாத் திட்டங்களிலும் துரிதமாக வேலை நடைபெறத் தேவையான பணத்தை நாம் ஒதுக்கியுள்ளோம். திட்ட வேலைகள் செலவுக்காக ஒதுக்கப்பட்டுள்ள தொகையின் விவரங்கள் அடங்கிய பட்டியல் தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளது. நடப்பு ஆண்டில் பெரிய நீர்ப்பாசனங்களுக்காகச் செலவிடப்பட்ட தொகையைவிட இப்பொழுது ஒதுக்கப்பட்டுள்ள தொகை 1 கோடியே 17 லட்ச ரூபாய் குறைவாகும். ஆனால் அதற்குக் காரணம் நமது பெரிய திட்டங்கள் எல்லாம் அநேகமாக முடிவடையும் கட்டத்தில் இருப்பதால் மேலும் அதிகப்

[Sri C. Subramaniam] [1st March 1958

படியான செலவுக்கு இடமில்லை என்பதேயாகும். மின்சார இலாகா மட்டுமே, இன்னும் அதிகத் தொகைகள் ஒதுக்கப் பட்டாலும் செலவு செய்யும் நிலையில் உள்ளது. இது தவிர அநேகமாக மற்ற இலாகாக்களுக்குத் தேவையான தொகைகள் அனைத்துக்குமே நாம் வகை செய்துள்ளோம். இன்னும் சில மாதங்களுக்குப் பின் மின்சார இலாக்காவின் தேவைகளை மீண்டும் பரிசீலனை செய்து நடப்பு ஆண்டில் செய்ததுபோலவே இயன்ற அளவு மேலும் சில தொகைகள் ஒதுக்க முயற்சி செய்யலாம்.

முடிவுரை.

33. அன்னியச் செலாவணிப் பற்றாக்குறை பற்றியும் திட்டத்தை இன்னும் பூரணமாக நிறைவேற்றுவதில் உள்ள தடைகள் பற்றியும் நாட்டில் அடிக்கடி கவலை தெரிவிக்கப் படுகிறது. எஃகுத் தொழிற்சாலைகள், கன இயந்திர உற்பத்திச் சாலைகள், அலுமினியம் தொழிற்சாலைகள், கன மின்சார தொழிற்சாலைகள், உர உற்பத்திசாலைகள் ஆகியவை போன்ற பெரும் இயந்திரத் தொழில் திட்டங்களுக்கு அன்னியச் செலாவணி பற்றாக்குறை முக்கிய தடையாக இருக்கலாம். ஆனால், ராஜ்ய ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ள பெருவாரியான திட்டங்கள், விவசாய அபிவிருத்தி, குடிநீர் வசதி, பாசனத் திட்டங்களைப் பழுதுபார்த்தல், கல்வி அபி விருத்தி, சாலைகள், ஆஸ்பத்திரிகள் அமைத்தல் போன்றவை. அவற்றிற்கு அன்னியச் செலாவணிக் குறைவு முக்கியமான தடையாய் இல்லை. நமது ராஜ்ய திட்டத்தில் மின்சார அபி விருத்திக்கு மட்டுமே அன்னியச் செலாவணி மிக முக்கிய மானது. ஆனால், அதிர்ஷ்டவசமாக இத்திட்டங்களுக்குத் தேவையான இயந்திரங்களை நாம் ஏற்கெனவே பெற்று விட்டோம். ஆகவே நமக்குள்ள முக்கிய சிக்கல், மற்ற ராஜ்யங்களுக்கு இருப்பது போலவே, உள் நாட்டு நிதி வசதிக் குறைவே. மத்திய அரசாங்கத்திலிருந்து அதிகப்படியான உதவி வேண்டுமென்று நாம் வற்புறுத்தலாம். ஆனால், மத்திய அரசாங்கத்தின் நிதி வசதிகளும் ஓரளவுக்கு உட்பட்டவையே. நாட்டு மக்களின் சேமிப்பிலிருந்துதான் அவையும் வர வேண்டும். வாழ்க்கைத் தரத்தை வெகு வேகமாக உயர்த்த வேண்டும் என்பதில் நம் அனைவருக்கும் அக்கறை உண்டு. ஆனால் மேலும் முன்னேற வேண்டுமானால் மக்கள் இன்னும் அதிகம் சேமித்து, அதைத் திட்டத்திற்காகப் பயன்படுத்த முன்வர வேண்டியது மிகவும் அவசியமாகிறது. உலகில் முற் போக்கு அடைந்துள்ள எல்லா நாடுகளின் வரலாறுகளும் இதே படிப்பினையைத்தான் உணர்த்துகின்றன. சுபீட்சத்திற்குக் குறுக்கு வழி எதுவும் கிடையாது. இந்த நாடுகள் அனைத்தும் ஆரம்பத்தில் பாடுபட்டுப் பல தியாகங்கள் செய்த பின்பு தான் செழிப்பான, வளர்ச்சியான, பொருளாதார அமைப் புக்கு அஸ்திவாரம் அமைக்க முடிந்தது. இந்த நோக்குடன் தான் புது வரி விதிப்பின் அவசியத்தையும், மாவட்டங்களில்

1st March 1958] [Sri C. Subramaniam]

சிறு சேமிப்புக்காக இப்பொழுது எடுத்துவரும் முயற்சிகளின் முக்கியத்துவத்தையும் நாம் மக்களுக்கு விளக்க வேண்டும். இந்தப் புது வரி விதிப்பினுல் நமக்குச் சற்று மனக்கசப்பு ஏற்படலாம். சில நடவடிக்கைகளில் அதிகாரிகள் நிர்ப்பந்தம் செய்கிருர்கள் எனப் புகார் செய்வதற்கு இடம் ஏற்படலாம். ஆனுல் நம்முடைய வாழ்நாளிலேயே ஒரு சோஷியலிச சமுதாய அமைப்பை நாம் அடைய வேண்டும் என்று நாம் கொண்டுள்ள உறுதியின் பயனுக ஏற்படும் விளைவுகளையும் பொறுப்புகளையும் நாம் தட்டிக் கழிக்க முடியாது. மேலும், அந்நியச் செலாவணியில் தற்போது ஏற்பட்டுள்ள நெருக்கடிக்கு முக்கிய காரணம் உணவுப் பற்ருக்குறை. இதன் காரணமாகத்தான் அயல் நாடுகளிலிருந்து நாம் உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. இந்தச் சிக்கலைத் தீர்க்கும் பொறுப்பு பெரும்பாலும் நம் கையிலேயே உள்ளது. ஏனென்ருல் தொழு உர உபயோகம், நகரக் கழிவு உர உபயோகம், தழை உரத்தைப் பயன்படுத்தல், உயர்ந்த ரக வித்துக்களைப் பயன்படுத்தல் போன்ற நடவடிக்கைகளை நாம் மேற்கொள்வதற்கு அன்னியச் செலாவணி எதுவும் தேவையில்லை. இத்தகைய எளிய விவசாய முறைகளில் நாம் இன்னும் சற்று அக்கறை காட்டினுல் உணவுப் பற்ருக்குறையைப் பெரும் அளவுக்குத் தீர்க்க முடியும். அதனுல் மிஞ்சும் அன்னியச் செலாவணி வசதிகள், திட்டத்தின் மற்ற முக்கிய வேலைகளுக்குக் கிடைக்கும்படி செய்யமுடியும். இதில் இச்சபையில் உள்ள கனம் அங்கத்தினர்களும், மற்ற நண்பர்களும் ஒத்துழைத்து உதவுவதற்கு நல்ல வாய்ப்பு உள்ளது. அனைவரும் தங்கள் சொந்தப் பண்ணைகளிலேயே உற்பத்தியைப் பெருக்கி, அதன் மூலம் திட்டத்தின் இம்முக்கிய குறிக்கோளை மற்றவர்களுக்கு உணர்த்த முன்வரவேண்டும். அரசாங்கத்தின் பல்வேறு விவசாயத் திட்டங்களையும் மக்களுக்கு விளக்க வேண்டும். இதன் மூலம் விவசாயிகளுக்கும் தேசீய வளர்ச்சித் திட்டத்தில் பல்வேறு துறைகளில் கிராமங்களில் வேலை பார்க்கும் ஸ்தாபனங்களுக்கும் இடையே நெருங்கிய உறவு ஏற்படுத்தி, இப்பிரச்னைக்குத் தீர்வுகாண உதவ வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

34. இவ்வுரையை முடிக்குமுன் சமீபகாலம் வரை மத்திய அரசாங்கத்தில் நிதி மந்திரியாயிருந்த திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் நமக்கு நல்ல ஆலோசனைகள் கூறி உறுதுணையாக இருந்ததற்கு நன்றி செலுத்த விரும்புகிறேன். அவர் ஏற்றிருந்த உயர்ந்த பொறுப்பிலிருந்து திடீரென அவர் விலகியதால் நாட்டிற்கு ஏற்பட்டுள்ள பெரிய நஷ்டம் பற்றிப் பார்லிமெண்டிலும் பத்திரிகைகளிலும் பொது மேடைகளிலும் ஆழ்ந்த வருத்தம் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆனுல் சென்னையிலுள்ள நமக்கோ இந்த நஷ்டம், ஈடு செய்யமுடியாதது; நன்றியுரை.

[Sri C. Subramaniam] [1st March 1958

மத்திய அரசாங்க மந்திரி என்ற முறையில் நாட்டுக்குப் பொதுவான பொறுப்புகளுக்கு முரண்படாத வகையில், அவர் நம் ராஜ்யத்துடன் கொண்ட தொடர்புகள் அனைத்திலும் அவர் நம்மில் ஒருவர் என்பதையே நிரூபித்து வந்துள்ளார். பொதுவாக நாட்டுக்கும், குறிப்பாக இந்த ராஜ்யத்தின் மக்களுக்கும் அவர் செய்துள்ள சிறந்த சேவைக்கு நம்முடைய ஆழ்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்வதில் கனம் அங்கத்தினர்களிடையே ஒன்றுபட்ட கருத்து இருக்கும் என்று நம்புகிறேன்.

என் வேலையிலும், குறிப்பாக இந்த வரவு செலவுத் திட்டத்தை வகுப்பதிலும் ஆலோசனை கூறி உதவி செய்த நிதி இலாகா காரியதரிசி திரு. டி. ஏ. வர்கிஸ் அவர்களுக்கும் அவருடைய திறமைவாய்ந்த சகாக்களுக்கும் என்னுடைய மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இவ்வுரையுடன் 1958-59-ம் ஆண்டுக்கான இந்த வரவு செலவுத் திட்டத்தை இச்சபை ஏற்குமாறு வேண்டுகிறேன்.

MR. SPEAKER : இந்த வரவு செலவுத் திட்டத்தின் மீது திங்கள் முதல் 6 நாட்கள் பொது விவாதம் நடைபெறும். இந்த சபையை திங்கள் காலை 11 மணி வரையில் நான் ஒத்திவைக்கிறேன். ஆனால் "பிஸினஸ் அட்வைசரி கமிட்டி"யானது சபை உட்காரும் நேரத்தை மாற்றினால் அதை அங்கத்தினர்களுக்குத் தெரிவிக்கிறேன்.

**The House then adjourned.**

## IV.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

*A. Statutory rules, orders and notifications.*

56. *Notification issued with G.O. No.* 4538, *Revenue, dated 7th December* 1957, *amending rule* 3-*A of the Madras General Sales Tax Rules*, 1939. [Laid on the Table of the House under Section 19 (6) of the Madras General Sales Tax Act, 1939.)]

57. *Notification issued with G.O. Ms. No.* 3346, *Home, dated 23rd December* 1957, *inserting rule* 459 *to the Madras Motor Vehicles, Rules*, 1940. 'Laid on the Table of the House under Section 133 (3) of the Motor Vehicles Act, 1939 (Central Act IV of 1939).]